# பிரவுன் & போல்ஸன் மற்றும்




# தயாரிப்புக்கள்

## உங்கள் சமையலுக்குப் பல்வேறு சுவை கூட்டுகின்றன.






**ரெக்ஸ் ஜெல்லி க்ரிஸ்டல்**

ஆறு இனிய பழச் சுவைகள். விரைவிலே எளிதாகத் தயாரிக்கலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை யாவரும் விரும்பக் கூடியது.






**ரெக்ஸ் பேகிங் பவுடர்**

தின் பண்டங்களை மென்மையாக்க சிறிது சேர்த்தால் போதும். கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப்ஜாமுன் தயாரிக்க உபயோகியுங்கள்.



**பி & பி கஸ்டர்டு பவுடர்**

மென்மையான செழுமையுடன் இனிமையானது. முட்டை கலவாதது. ஃபிர்னி, ஐஸ் க்ரீம், கீர், ட்ரைபிள் தயாரிக்க ஏற்றது. ஜெல்லி மற்றும் ப்ரூட் ஸாலெட்டுடன் பரிமாறும் போது சுவை கூட்டுகிறது.









**பி & பி வெரைட்டி கஸ்டர்டு பவுடர்**

ஆறு சுவைகள். புட்டிங்குகள், பழ உணவுகள் தயாரிக்க உகந்தது.






**பி & பி ஃப்ளேவர்டு கார்ன் ஃப்ளவர்**

ஐந்து சுவைகள். இனிமையான ஹல்வாக்கள் தயாரிக்க பாலோடு மென்மையாகக் கலக்கலாம்.






**பி & பி பேடெண்ட் கார்ன் ஃப்ளவர்**

சூப்புகளோடும், இறைச்சிக் குழம்பையும் இறுக்கமாக்குகிறது. கரகரப்பான கபாப், சமோசா, கட்லெட் தயாரிப்பதில் மாவுடன் சேர்க்கச் சிறந்தது. குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் மிகவும் நல்லது.

*உங்கள் சமையல் உன்னதமாக இருக்க, உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்*



**கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.,**

ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாட்ச் ரோடு, பம்பாய் 1 BR

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ் 1. மற்றும் அவர்களது கிளைகள்




பாதுகாப்பிற்கு
ஒரு பூட்டு உள்ள
தெனில் அது
நவ-தால் ஒன்றே
ஒன்றுதான் !

# நவ-தால்

நம்பிக்கையானது. அதனால் தான் பாங்குகளும் தொழிற்சாலைகளும், கிடங்குகளும் நவ-தால் பூட்டையே உபயோகிக்கின்றனர். அதிநுட்பமான தயாரிப்பு! ஒவ்வொரு பூட்டுக்கும் மாறுபட்ட இணைப்புமுறையில் வெட்டப்பட்ட சாவிகள். உடைத்து திறக்க இயலாதபடி அதிக பாதுகாப்பு அளிப்பதற்கேற்ற முறையில் செய்யப்பட்டது நவ-தால். பித்தளை, எஃகினாலான இரட்டைக்கூடு அதை மிகமிக உறுதியாக்குகிறது. தயாரிப்பவர்கள்: கோத்ரெஜ்-பாதுகாப்பு உபகரணங்களைத் தயாரிப்பதில் 70 ஆண்டுகளுக்கும் மேலான அனுபவமுடையவர்கள்.

4 சைஸ்கள் :
40 mm (5 லீவர்கள்)
50 mm (6 லீவர்கள்)
67 mm (7 லீவர்கள்)
85 mm (8 லீவர்கள்)

Godrej கோத்ரெஜ் எப்போதும் நங்கூரம் மார்க் பூட்டுகளையே கேட்டு வாங்குங்கள்



# கல்கி

பொருளடக்கம்



சாதாரண, வைகாசி, 24 — 1970, ஜூன், 7



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |






நக்ஸல்பாரி நிலைமை எப்படி இருக்கிறது?
அதைப்பற்றிக் கேட்காதீர். என் கவனம் முழுதும், பணக்காரரை ஏழையாக்குவதிலும், ஏழையை மேலும் ஏழையாக்குவதிலுமே உள்ளது.
கரியப்பா
SAMA





பூலோகத்துக்குத் திரும்பிப் போய் இந்தியாவை முன்னேற்ற நாம் கூட்டு முயற்சி செய்வோமா?
அது இயலாது. இந்திய அரசு நம்மைத் திருப்பி அனுப்பி விடும்.
இந்திய அரசு உங்களுடையது தானே?
ஐயோ, அப்படிச் சொல்லி காந்திஜியைப் பழிக்காதீர்.
அக்பர்
காந்திஜி
அசோகர்
புத்தர்
SAMA



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மலர் 29 ● இதழ் 45



# பயிற்சி மொழி

பாட போதனை எந்த மொழியில் இருக்க வேண்டும் என்பதைப் பற்றி நிறைய எழுதியாகி விட்டது, பேசியாகி விட்டது. எனினும், இப்பிரச்னையில் போதிய அளவு வற்புறுத்திச் சொல்லப்படாத அம்சமொன்று இருப்பதாக நான் கருதுகிறேன்.

இந்தியாவில் ஆகட்டும், வேறு நாடுகளில் ஆகட்டும், கல்வியின் ஆரம்ப நிலைகளில் பாட போதனை தாய்மொழியில் தான் நடந்தாக வேண்டும். இதைப் பற்றிச் சந்தேகமே கிடையாது. ஆரம்பக் கல்விக்கு மேலே உள்ள கட்டங்களில் எது பயிற்சி மொழியாக இருக்க வேண்டும் என்பதுதான் பெரிய பிரச்னை. இந்தியா பல மொழி பேசும் நாடு. மொழிகள் பல இருந்தும் ஒரு தேசிய சமுதாயமாக மக்கள் எல்லோரும் வாழ வேண்டிய நாடு. இப்போது நம் நாட்டில் பயிற்சி மொழி விஷயமாகப் பல வகைக் கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. விஷயம் மிகவும் சர்ச்சைக்குரியதாகி விட்டது. இதில் வெற்று உணர்ச்சிகளைக் கொண்டு வந்து சேர்த்து முறுக்கேற்றியிருக்கிறார்கள்.

ஆரம்பக் கல்விக்கு மேல், உயர்நிலைப் பள்ளிப் படிப்பும், கல்லூரிப் படிப்பும் வருகின்றன. விஞ்ஞானம், தொழில் நுட்பத்துறை ஆகியவை விஷயமாக, உயர் கல்வியில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய பிரச்னை இருக்கிறது. எல்லாப் பிராந்தியங்களிலும் ஒரே அகில இந்திய மொழி பயிற்சி மொழியாக இருக்க வேண்டும் என்று கல்வித் துறை நிபுணர்களில் பெரும்பாலோர் கூறுகிறார்கள். அவர்களில் சிலர் ஆங்கிலத்தை ஆதரிக்கிறார்கள். மற்றவர்கள் ஹிந்தியை ஆதரிக்கிறார்கள். ஆங்கிலம் தான் வேண்டும் என்பதற்குச் சாதகமான வாதங்கள் பிரத்தியட்ச நோக்கு உள்ளவையாகவும், எதிர்காலம் பற்றி நம்பிக்கை தருவனவாகவும் இருக்கின்றன. அதை எதிர்ப்போர் தேசபக்தி என்ற உணர்ச்சியைக் கொண்டு வந்து கலக்கிறார்கள். ஆங்கிலம் வகித்து வரும் சர்வதேச உயர் நிலையைத் தெளிந்தறிய அவர்கள் மறுக்கிறார்கள். சென்ற இரண்டு நூற்றாண்டுகளில் கல்வித் துறையிலும் நிர்வாகத்திலும் ஆங்கிலத்தை ஏற்றுக் கொண்ட வரலாற்றுச் சிறப்பின் காரணமாக இந்தியாவுக்குச் சில விசேஷ அநுகூலங்கள் வாய்த்துள்ளன. இதை ஹிந்தி ஆதரவாளர்கள் ஏற்க மறுக்கிறார்கள். ஹிந்தி மொழியானது சுதந்திரத்துக்கும், பெரும்பான்மையினரின் ஆட்சிக்கும் சின்னமாக விளங்குகிறது என்பது அவர்களது வாதம். ஆனால் பெரும்பான்மையினரின் ஆட்சி மட்டும் முழு ஜனநாயகமாகி விடாது; பெரும்பான்மையினரின் சர்வாதிகாரம் ஜனநாயகமே அல்ல.

இத்தருணத்தில் வாசகர்களுக்கு ஒரு புதிய விளக்கத்தை வழங்க முற்படுகிறேன். ''பயிற்சி மொழி'' என்பது ஒரே மொழியாகத்தான் இருந்தாக வேண்டும் என்ற அவசியமில்லை. விஞ்ஞானப் பாடங்களில் பயிற்சி என்பது பரிசோதனைகளைச் **செய்து காட்டுவது மாகும்**. ஏதாவது ஒரு மொழியில் உரையாற்றுவது மட்டும் பயிற்சியாகாது. சரித்திரம், பொருளாதாரம், தத்துவம் போன்ற பாட விஷயங்களை எடுத்துக் கொண்டாலும் ஆசிரியர்களின் உரை, பாட புத்தகங்களைப் பயன்படுத்துவது, நூலகங்களை உபயோகித்துக் கொள்வது இவற்றால் மட்டும் கல்வி பெற்றுவிட முடியாது. இவை யாவற்றுக்கும் நோக்கம் அறிவைத் திட்டவட்டமாக வழங்குவதே. என்ன சொல்லிக் கொடுக்கிறார்களோ அதை மாணவர்கள் பிழையின்றிப் புரிந்து கொள்ள வேண்டும். எனவே, சொல்லித் தருவதைத் திட்டவட்டமாகப் புரிந்து கொள்வதற்கு இசைவாக ஆங்கிலம், தாய்மொழி ஆகிய இரண்டையுமே ஆசிரியர்கள் ஏன் பயன்படுத்தலாகாது? ஒழுங்காக முழு அளவில் மாணவர்களால் புரிந்துகொள்ள இயலாத நிலைமையில் ஆசிரியர் ஆங்கிலத்தில்மட்டுமே

உரை நிகழ்த்துவதால் அறிவு போதிக்கும் உண்மை நோக்கம் நிறைவேறாது. செயற்கையான புதுச் சொற்றொடர்களைக் கொண்டு தமிழ், தெலுங்கு அல்லது ஹிந்தி மொழியில் மட்டும் ஆசிரியர்கள் உரை நிகழ்த்துகின்ற நிலைமையும் இதைப் போன்றதே. அறிவில் பதியுமாறு விளக்கம் தருவதற்கு 'ஒரே மொழி உரை' பயன்படுவதில்லை. ஆங்கிலத்திலும், ஸ்தல இந்திய மொழியிலும் சேர்ந்து போதிக்க வேண்டும். ஆங்கிலத்தில் நல்ல பாட புத்தகங்கள் இருக்கின்றன. எல்லாக் கல்லூரிகளிலும் அவை போதிக்கப்படும்போதே, தாய் மொழியிலும் விளக்கம் தந்து இரு மொழிப் பயிற்சி முறையை ஆசிரியர் பயன்படுத்தியாக வேண்டும். ஆனால் இப்பொழுது இம்மாதிரி நடைபெறுவதில்லை. ஆகையால்தான் இதைச் செய்யுங்கள் என்று நான் வேண்டிக் கொள்கிறேன். பாடத்தைப் போதித்து வரும் நல்லாசிரியர், எந்தச் சமயம் ஆங்கிலத்திலிருந்து தாய்மொழிக்கு மாற வேண்டும், பிறகு மீண்டும் ஆங்கிலத்துக்கு எப்பொழுது திரும்ப வேண்டும் என்பதை நன்கு அறிவார். நான் வேண்டிக் கொள்கிறபடி போதனை நடைபெறுமாயின் இரண்டு நோக்கங்கள் ஒன்றாகக் கைகூடும். முழு அளவில், திட்டவட்டமாக, தெரிந்துகொள்ள வேண்டியதை மாணவருக்குப் புரிய வைக்க முடியும். அதே சமயத்தில் தேசம் முழுவதற்கும் பொதுவான ஆங்கில மூல நூல்களைப் படிப்பதால் படிப்புக்காகவோ, வேலைக்காகவோ இந்தியாவெங்கும் செல்வதற்கு அவசியமான தகுதி இதன் மூலம் கிடைக்கும். பல்கலைக் கழகங்களையும் ஹைஸ்கூல் படிப்பையும் நிர்வகிப்பவர்கள் மாணவர்களுக்கு எது நன்மை தரக்கூடியது என்பதில் அக்கறை கொள்ள வேண்டும். பிராந்திய சர்க்கார்கள் அரசியல் நோக்குடன் பிறப்பிக்கும் உத்தரவுகளை எதிர்த்து மாணவர்களுடைய நலன்களை நிலைநாட்டும் பொறுப்பை அந்த மாணவர்களிடமே விடக்கூடாது. இப்பொறுப்பைக் கல்வி நிலைய நிர்வாகிகளே ஏற்கவேண்டும்.

நாம் நமது தாய்மொழியை ஆர்வத்துடன் நேசிக்கிறோம். அந்த அன்பு எவ்வாறு செயல்பட வேண்டும்? அதில் உள்ள பேரிலக்கியங்களைத் தீவிரமாகப் படிக்கலாம். அந்த மொழியில் புதிய பயனுள்ள நூல்களைத் தயாரிக்கலாம். நூல்களைப் படைக்கும் ஆற்றல் உடையவர்கள் இன்று கற்பனைக் கதைகளையே பெரும்பாலும் எழுதுகிறார்கள். பிரசுரகர்த்தர்களும் சினிமா தயாரிப்பாளரும் அவற்றை வாங்க ஆவலுடன் இருக்கிறார்கள். இத்தகைய கதைகளெல்லாம் நிலையான மதிப்புள்ளவை அல்ல. இவற்றைவிட மதிப்புடைய நூல்களைத் தாய்மொழியில் தயாரிப்பதில் நமது அன்பும், திறமையும் ஈடுபட வேண்டும். நல்ல கற்பனைக் கதைகளுக்கும், வேகமாக விற்பனையாவதற்காக எழுதுபவைக்கும் வித்தியாசம் உண்டு. வீரம், கருணை, மனிதாபிமானம் போன்ற உணர்ச்சிகளை மனத்தில் பதிப்பிக்கின்ற நல்ல கற்பனைக் கதைகள் விசேஷ மதிப்புள்ளவை என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் வேகமான விற்பனைக்காக எழுதுபவை ஆபாச நூல்களைப் போலவே பயனற்றவை.

நமது பல்கலைக் கழக மாணவர்கள் பண்பாட்டுச் சிறப்புள்ளவர்களாகத் திகழவேண்டும். பல பிராந்தியச் சிறப்புக்களின் பிரதிநிதிகளாக அவர்கள் இருந்துவிட்டால் போதாது. அவர்கள் ஓர் அகில இந்திய சகோதரக் கூட்டத்தினராக இணைய வேண்டும்.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)

# ராஜாஜியின் கருத்துக்கள்

''ஐ. நா. ஸ்தாபனம் தனது சொந்தச் சொல் மாரியில் மூழ்கிக் கொண்டிருக்கிறது'' என்று அண்மையில் நியூயார்க் நகரில் கனடாவின் முன்னாளையப் பிரதமர் பியர்ஸன் கூறினார். உலகம் ஒழுங்காக நடைபெற வேண்டும் என்று விரும்பும் ஒவ்வொருவரும் ஐ. நா.வின் சக்தியின்மையைப் பற்றிப் புகார் செய்வதைக் காண்கிறோம். ஐ. நா.வானது பழியைப் போடுவதற்கு ஏற்ற மூன்றாவது மனுஷனல்ல. நாகரிகத்திலும் ஒழுங்கிலும் நம்பிக்கையுள்ள எல்லா உலக நாடுகளின் ஒன்றுபட்ட ஆற்றலுக்கும் அது பிரதிநிதியாக இருக்கிறது. ஐ. நாவினால் எதையும் சாதிக்க முடியவில்லை என்றால், குறை சொல்ல வேண்டியது உலக மக்களைத்தான். ஒழுங்கு முறையை நாடிய அவர்களுடைய முயற்சிகள் வீணாவதேன்? நல்ல சாதனைகளுக்குத் துணை புரியக்கூடியவர்கள் 'பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன்' என்ற ரீதியில் நடந்துகொள்வதுதான் இதற்குக் காரணம். அகில உலகத்துக்குமாக ஓர் அரசாங்கம் வேண்டும்; அதே சமயத்தில் ஒவ்வொரு நாட்டின் ஆதிபத்திய அதிகாரமும் குறையக் கூடாது என்று தேசங்கள் விரும்புகின்றன. ஒன்றைக் கட்டுப்படுத்தாமல் மற்றது கிடைக்காது. இதை மறந்ததால் அனுபவித்த பேராபத்துக்களையெல்லாம் இதற்குள் தேசங்கள் மறந்துவிட்டு மீண்டும் உலகப் போராட்டம் நடைபெறுவதற்கான நிலைக்குத் திரும்பி விட்டன.

*

தேச விடுதலைப் போரில் ஒன்றி உழைத்த மூன்று முதிய பத்திரிகையாளர் காலமானது எனக்கு வருத்தமா யிருக்கிறது. ஜி. வி. கிருபாநிதி ராஜீயத் துறையில் என்னுடன் சேர்ந்து உழைத்தவர்; எனக்கு மதிப்பு மிக்க நண்பர். அவர் அமைதியும் அடக்கமும் உருவானவர். அதே சமயத்தில் உறுதியான கோட்பாடுகளைக் கொண்டவர். ராஜீயவாதிகளிடையே அவரைப் போன்றவரைப் பார்க்க முடியாது. பி. ஆர். ராமையா ஆற்றல் மிகுந்தவர். மகாராஜா ஆட்சியின் கீழ் மைசூர் அரசியலில் சக்தி வாய்ந்த வியக்தியாக விளங்கினார்.

''திரிவேணி'' ஆசிரியர் ஸ்ரீ கே. ராமகோடீசுவர ராவும் காலமாகிவிட்டார். அவர் என் அன்புக்கும் மதிப்புக்கும் உரியவர். தூய்மையும் எளிமையும் உருவாக விளங்கியவர். அவரது மரணம் எவ்வளவு விசனத்தைத் தருகிறது என்பதைச் சொல்லத் தேவையில்லை.



இலங்கைத் தேர்தலில் ஸ்ரீமதி சிரிமாவோ பண்டார நாயகாவின் இடதுசாரிக் கூட்டணி மிகப் பெரிய வெற்றியை அடைந்திருக்கிறது. நூற்றைம்பது ஸ்தானங்களில் அதற்கு நூற்றிப்பதினைந்து கிடைத்துள்ளன. ஸ்ரீமதி பண்டார நாயகாவின் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சிக்கு மட்டும் தொண்ணூறு ஸ்தானங்கள் கிடைத்துள்ளன. எனவே தனிப் பெரு மெஜாரிட்டியுடன் ஆட்சி செலுத்த அவரால் முடியும். தீவிரமான இடதுசாரித் திட்டங்களை நடத்தி வைக்கப்போவதாகச் சொல்லி மக்களின் ஆதரவைக் கூட்டணியினர் கோரினர். தவிர இந்தத் தேர்தலின் மூலம் வரும் பார்லிமெண்டையே அரசியல் நிர்ணய சபையாகக் கருதி அரசியல் சாசனத்தையே மாற்றியமைக்கப் போவதாகவும் கூட்டணியினர் அறிவித்திருந்தனர். இவையெல்லாமே மக்களுக்குக் கவர்ச்சிகரமாக உள்ளவை. வாக்காளர்களின் வயது பதினெட்டாகச் சமீபத்தில் குறைக்கப்பட்டு விட்டது. புதிதாக வாக்குரிமை பெற்ற இளைஞர்கள் இடதுசாரிக் கூட்டணியை ஆதரித்திருக்கக் கூடும்.

இத்தேர்தல் பற்றி ராஜாஜி கூறுவதாவது: ''பொதுத் தேர்தல்கள் நடந்தவுடன் சர்க்காரை மாற்றி விடுவது என்ற ஜனநாயகத்தின் இயற்கை விதியை இலங்கை பின்பற்றியுள்ளது. எந்தச் சர்க்காராலுமே அனைவருக்கும் திருப்தி தர முடியாது; அதேபோல் எந்தச் சர்க்காராலும் யாரையுமே அதிருப்திப்படுத்தாமலும் இருக்க முடியாது. இதுகாரணமாகத்தான் வாக்காளர்கள் மாறுதல் விரும்பி வாக்களிக்கிறார்கள். சிரிமாவோ பண்டாரநாயகாவின் ஆட்சியில் எல்லா நலன்களும் விளையப் பிரார்த்திக்கிறேன். சொந்த நலனுக்காகவும் கட்சி நலனுக்காகவும் பதவி வகிக்காமல், இலங்கை நாட்டிடம் அன்பு வைத்து, நல்ல, நேர்மையான ஆட்சிக்காக உழைக்கும் தகுதி வாய்ந்த, ஊக்கமுள்ள சகாக்களின் ஒத்துழைப்பு அவருக்கு ஓர் அநுகூலமாக அமையும் என நம்புகிறேன். ஒவ்வொரு மந்திரியும் தனக்கு ஸ்தானமும் பதவியும் பொறுப்பும் தந்த கட்சியை மட்டும் சேர்ந்தவரல்ல; மக்கள் அனைவருக்குமே மந்திரி என்பவர் சேவகன், காப்பாளன். இதுவே ஜனநாயக தத்துவம். ஒன்று நிச்சயம் — இந்தியாவையும், சமீபத்திய பாகிஸ்தானையும்விடச் சிறப்பான முறையில் இலங்கையில் ஆட்சி நடைபெறும்.''

இலங்கை வாழ் தமிழர்களின் பிரதான அமைப்பு தமிழ் அரசுக் கட்சி. அது முன்னை விட ஒரு ஸ்தானத்தை அதிகமாகப் பெற்றுள்ளது. அக்கட்சியின் நியாயமான கோரிக்கைகளுக்கு மதிப்புக் கொடுத்து இந்தியர்களுக்குப் புது சர்க்கார் எல்லா வகைகளிலும் நன்மை செய்ய வேண்டுமென்பதுதான் நமது கோரிக்கை. இந்தியா - இலங்கை உடன்பாட்டை நல்ல முறையில் சரிவரப் புதிய பிரதமர் அமுலாக்குவார் என்று நம்புவோமாக.

# வாக்குறுதி

**வா**க்குறுதி என்பது சமூக வாழ்க்கைக்கும் உலக வாழ்க்கைக்கும் அடிப்படையான தர்மமாகும். வாக்குறுதி இல்லாவிட்டால் அன்றாடச் சமூக வாழ்க்கையே நன்றாக நடைபெறாது என்பதை மக்கள் அறிந்தும் உள்ளார்கள். ஒருவன் மற்றொருவனிடம் சொன்ன சொல்லைக் காக்காவிட்டால், ஒரு காரியத்தைச் செய்வதாகச் சொல்லிச் செய்யாவிட்டால், அதனால் எவ்வளவு கேடும் கஷ்ட நஷ்டங்களும் ஏற்படுகின்றன என்பதை அநுபவத்தில் அறிகிறோம்.

'நல்ல பொருள்' என்று ஒன்றை வியாபாரி கொடுத்தால் உண்மையிலேயே அது நல்லதாக இருக்க வேண்டும். மோசம் கூடாது. அப்படி இல்லாவிட்டால் மேலும் அவனுடன் வியாபாரம் செய்வது தடைப்படும் என்பது நிதர்சனம். கடன் கொடுக்கல் வாங்கல் நடவடிக்கைகளிலும், குறிப்பாகப் பாங்கி முதலிய ஸ்தாபனங்களில் தவணைப்படி செலுத்த வேண்டியவற்றைச் செலுத்துவதிலும், வாக்குறுதி காக்கப்பட வேண்டும். அப்படி இல்லாவிட்டால் இந்த ஸ்தாபனங்கள் நசித்தேவிடும்.

பிற தேசங்களுக்கு வியாபார முறையில் உளுந்து முதலிய தானியங்களை ஏற்றுமதி செய்தபோது, அவற்றில் சிறிய கற்கள் நிறையச் சேர்க்கப்பட்டிருந்ததனால் அந்த ஏற்றுமதி ஒப்பந்தம் ரத்தாகி வியாபாரம் தடைப்பட்டு விட்டதைப் பத்திரிகைகளின் வாயிலாக அறிந்துள்ளோம். பிற தேசங்களுக்கு வியாபார முறையில் பொருள்களை அனுப்பும்போது அது நல்ல பொருள் என்பது பற்றிய வாக்கைக் காக்க வேண்டும். அப்படி இல்லாவிட்டால் வியாபாரம் கெடுவதுடன் தேசத்தின் பெருமையும் கெட்டுப்போகும் நஷ்டமும் ஏற்படுகிறது.

கௌடில்யரின் அர்த்தசாஸ்திரத்தில் 'வாக்குறுதியினால் ஏற்படும் சந்தி (ஒற்றுமை) தான் சிறந்தது' என்று புகழ்ந்து இதற்கு 'த்ருவ ஸந்தி' என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். இந்த வாக்குறுதியை ஒரு ஸாதாரண தர்மமாகவே எண்ணி மக்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்து வந்தார்கள்.

'ஜாதி, தேசம், குலம், சமயம் இவை எல்லாவற்றையும் சார்ந்துள்ள மகாவிரதம் வாக்குறுதி' என்று யோகஸூத்ரம் கூறுகிறது. இந்த மகா விரதத்தை அநுஷ்டித்தவர்கள் தாம் ஸ்ரீராமனும், பீஷ்மரும். 'ராஜ்யத்தைக் கைக்கொள்ள மாட்டேன்; விவாகமும் செய்து கொள்ள மாட்டேன்' என்ற பீஷ்மரின் உறுதியை, சந்தனு மன்னனின் பிள்ளைகள் இறந்து, நாட்டுக்கு அரசன் இல்லாத நிலையில், 'சந்தனு அரசனின் ஜீவிய காலத்தில் உறுதி நியாயமானாலும் இப்போது அதைக் கடைப்பிடிப்பது சரியல்ல' என்று சந்தனு ராஜனின் மனைவி ஸத்தியவதியே கூறியும், பீஷ்மர் தமது வாக்கை மாற்றிக்கொள்ள முடியாது; மூவுலகமும் நிலைத்திருப்பதே வாக்குறுதி என்ற அடிப்படைத் தர்மத்தினாலேதான் என்று கூறி, வாக்குறுதியை மீற மறுத்து விட்டார்.

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகளின் பூரண ஆசியுடன் நடத்தப்படும் 'காம கோடி ப்ரதீபம்' வைகாசி இதழ்த் தலையங்கத்தின் பகுதிகள் வருமாறு:**

“**பூ**மி தன் இயற்கைக் குணமான மணத்தையோ, ஜலம் ரஸத்தையோ, ஒளி தன் உருவத்தையோ, காற்று தன் அஸாதாரண குணத்தையோ விட்டாலும் விடக்கூடும். ஆனால் நான் ஸத்தியத்தை ஒருபோதும் நழுவ விடமாட்டேன்” என்கிறார் பீஷ்மர்.

இவ்விதமாக ராமனும் தான் கைகேயிடம் சொன்ன சொல்லுக்கு மாற்று இல்லை என்று கூறுமிடத்து. 'ராமோ த்விர் நாபிபாஷதே—ராமன் இரண்டு பேசுவதில்லை' என்கிறார் வால்மீகி. இங்கேதான் ராமாவதாரத்தின் அடிப்படையே நிலைக்கிறது. இவ்வாறே சந்திர வம்சத்து மன்னன் ஹரிச்சந்திரன் பொறுக்க முடியாத கஷ்டங்களையெல்லாம் பொறுத்து, நாடு பெண் பிள்ளைகளையும் இழந்து, மயானத்தில் வசிக்கும் நிலையையும் ஏற்றுத் தன் வாக்குறுதியைக் காத்தான்.

தமிழ் நாட்டில் பல நூற்றாண்டுகளுக்கு முன்னால், சென்னைக்குச் சமீபத்தில் உள்ள திருவாலங்காடு க்ஷேத்திரத்தில் வணிகனுக்குச் சொன்ன வாக்குறுதியைக் காக்க அவ்வூர் வேளாளக் குடும்பத்துத் தலைவர்கள் எழுபது பேர்கள் நெருப்பில் விழுந்து உயிர் துறந்தனர். திருவாலங்காட்டுக்கு அக்காலத்தில் பழையனூர் என்று பெயர். பழையனூரில் இந்தச் சம்பவம் நடந்ததாகப் பெரிய புராணத்தில் உள்ளது.

நம் நாட்டில் இவ்வாறெல்லாம் அக்காலத்தில் வாக்குறுதி மக்களால் நன்றாகக் கடைப்பிடிக்கப்பட்டு, சாதாரண மனிதர்களும் சொல் தவறாமல் வாழ்ந்தனர் என்பது நன்றாகத் தெரிகிறது. புகழேந்திப் புலவர், 'தொண்டை மண்டல மக்கள் சத்தியம் தவறாதவர்கள்' என்கிறார். ஆகவே, காஞ்சி மண்டலத்துக்கு 'ஸத்யவ்ரத' க்ஷேத்திரம் என்ற பெயர் உள்ளது.

இக்காலத்திலோ வாக்குறுதி என்பது மக்களிடமிருந்து வெகுதூரத்துக்கு அப்பால் போய் விட்டதைக் காண்கிறோம். நாடு சுதந்திரம் பெற்றபொழுது தேச அமைப்புச் சட்டத்தின் வாயிலாகச் சுதேச மன்னர்களுக்கு அளிக்கப்பட்ட வாக்குறுதியை இப்போது மாற்றத் தீர்மானிப்பது பெரிதும் தர்ம விரோதச் செய்கையே ஆகும். அவ்விதமே ஐ. ஸி. எஸ். அதிகாரிகள் விஷயத்திலும் ஒப்புக்கொள்ளப்பட்ட உறுதிகளை இப்போது மீறத் தீர்மானித்திருப்பதும் தர்ம விரோதமாகும். வியாபார முறையில் 'வாக்குறுதி' என்பதாக ஒன்று இல்லை என்பதை நன்கு காண்கிறோம். வேலைக்காரர்களோ, மற்றவர்களோ வாக்குறுதி என்பதாக ஒன்று இருப்பதாகவே நினைப்பதில்லை. பாரதத்தின் இந்தப் பழம் பெரும் தர்மத்தை நிலைபெறச் செய்வது நம் கடமை ஆகும்.



# பூர்வ கதை



இராஜ இராஜ சோழன் என்று சரித்திரத்தில் புகழ் பெற்ற அருள்மொழி வர்மன், சுந்தரசோழ சக்கரவர்த்தியின் இரண்டாவது மகன். குழந்தைப் பிராயத்தில் அவன் காவேரி நதியில் இராஜ குடும்பத்தாருடன் படகில் சென்று கொண்டிருந்தபோது வெள்ளத்தில் மிதந்த பூவை எடுக்கப் பார்த்து நதியில் விழுந்து மூழ்கிவிட்டான். குழந்தையைக் காணாமல் எல்லாரும் பதறி நின்ற சமயத்தில் ஒரு பெண்மணி வெள்ளத்திலிருந்து கையில் குழந்தையோடு எழுந்தாள். அவனைப் படகில் விட்டு விட்டு உடனே மறைந்தாள். காவேரித் தாயே குழந்தையைக் காப்பாற்றிக் கொடுத்ததாக அனைவரும் எண்ணினார்கள். ஆதலின் அரண்மனையிலும் சோழ நாடெங்கும் அவனுக்குப் 'பொன்னியின் செல்வன்' என்ற பெயரும் வழங்கி வந்தது.



பொன்னியின் செல்வன் சோழ நாட்டு மக்களின் உள்ளம் கவர்ந்த செல்வனுமிருந்தான். அவனைக் காட்டிலும் சோழ நாட்டு மக்களின் அபிமானத்துக்கு அதிக பாத்திரமா யிருந்தவள் அவன் தமக்கை குந்தவை தேவி. 'இளைய பிராட்டி' என்று மக்களால் மரியாதையுடன் போற்றப்பட்ட குந்தவை தன் தம்பியிடம் அளவில்லா அன்பு வைத்திருந்தாள். அருள்மொழிக்குச் சிங்காதன உரிமை இல்லையென்றாலும் அவன் ஒரு நாள் மகோன்னத நிலையை அடையப் போகிறான் என்று பூரண நம்பிக்கை வைத்திருந்தாள். பழையாறை அரண்மனையில் அவளுடைய தனித்த அன்புக்கு உரியவளாக வளர்ந்து வந்த கொடும்பாளூர் இளவரசி வானதியைப் பொன்னியின் செல்வனுக்கு மணம் புரிவிக்க அவள் விரும்பினாள்.

அருள்மொழி வர்மன் இளைய பிராட்டி இட்ட கோட்டைத் தாண்டாமல் நடந்து வந்தான். அவள் தூண்டுதலின் பேரில் இலங்கைப் போர்க்களத்துக்குச் சென்று வீரப் புகழ் பெற்றான். இலங்கை அரசன் மகிந்தன் மலைநாட்டில் ஓடி ஒளிந்த பிறகு சோழ நாட்டு வீரர்களுக்குச் சிறிது காலம் அங்கே வேலை இல்லாமலிருந்தது. அச்சமயம் அருள்மொழிவர்மன் இலங்கை மக்களுக்கு உகந்த பல காரியங்களைச் செய்தான். முக்கியமாக அநுராதபுரத்தில் இடிந்து தகர்ந்து கிடந்த பழைய புத்த விஹாரங்களையும் ஸ்தூபங்களையும் புதுப்பித்துக் கட்டினான். இதனால் மகிழ்ச்சி பெற்ற புத்த சங்கத்தின் ஒரு பகுதியார் அவனுக்கு இலங்கை அரசுரிமையை அளித்து முடிசூட்ட முன் வந்தார்கள். அவ்வாறு வலிய வந்த அரசுரிமையைப் பொன்னியின் செல்வன் மறுத்துவிட்டான்.

இலங்கையில் வெறி கொண்டவள்போல் அலைந்து திரிந்து கொண்டிருந்த ஊமை மூதாட்டி ஒருத்தியை அருள்மொழி வர்மன் சந்தித்தான். அவளே தான் தன்னைக் காவேரி வெள்ளத்திலிருந்து எடுத்துக் காப்பாற்றியவள் என்பதை அறிந்தான். அவள் எழுதிக் காட்டிய சித்திரங்களின் மூலம் அவளுடைய வரலாற்றையும் ஓரளவு தெரிந்து கொண்டான். அவனுடைய தந்தை சுந்தர சோழர் வாலிபப் பிராயத்தில் இலங்கையை அடுத்திருந்த ஒரு தீவில் தன்னந் தனியாக வந்து ஒதுங்கிச் சில காலம் வசிக்க நேர்ந்ததையும் அச்சமயம் இந்த ஊமை ஸ்திரீயிடம் அவர் காதல் கொண்டு வாழ்ந்ததையும் தெரிந்து கொண்டான். அந்த ஊமை ராணிக்குப் பிறந்ததாக அவன் அறிந்த இரண்டு குழந்தைகள் யாராயிருக்கக் கூடும் என்பதையும் ஒருவாறு ஊகித்துக் கொண்டான்.



சுந்தர சோழ சக்கரவர்த்தி பாரிச வாயுவினால் பீடிக்கப்பட்டுத் தஞ்சை அரண்மனையில் படுத்த படுக்கையாகக் கிடந்தார். வானத்தில் சில காலமாகத் தூமகேது ஒன்று காட்சி அளித்துக் கொண்டிருந்தது. இந்த உற்பாதம் இராஜ குடும்பத்தில் ஒருவருக்கு விபத்து நெருங்கியுள்ளதற்கு அறிகுறி என்று எண்ணிச் சோழ நாட்டு மக்கள் கவலை கொண்டிருந்தார்கள். சுந்தர சோழரின் இறுதி நெருங்கி விட்டதாகப் பலரும் நம்பினார்கள். அடுத்தாற்போல் பட்டம் யாருக்கு என்பதைப் பற்றி நாடெங்கும் சர்ச்சை நடந்து வந்தது.

சுந்தர சோழரின் மூத்த குமாரனும் பட்டத்து இளவரசனுமாகிய ஆதித்த கரிகாலன் அச்சமயம் காஞ்சி நகரில் இருந்தான். அவன் வீராதி வீரன். மதுரையின் கடைசி மன்னனாகிய வீர பாண்டியனைப் போர்க்களத்தில் முறியடித்த பிறகு அவனைத் தொடர்ந்து சென்று அவன் ஒளிந்திருந்த இடத்தைக் கண்டுபிடித்து அவன் தலையை வெட்டித் தஞ்சைபுரிக்குக் கொண்டு வந்தவன். காஞ்சியில் அவன் சுந்தர சோழரின் பிரதிநிதியாகவும் வட திசைச் சேனாதிபதியாகவும் விளங்கினான். ஆனால் அவன் உள்ளத்தில் நிம்மதி இல்லாமல் இருந்தது. இதற்குக் காரணமானவள் நந்தினி என்னும் பெண்.

ஆதித்தன் சிறுவனா யிருந்தபோது அவனோடு குலாவி விளையாடிய சிறுமி நந்தினி. அவள் ஒரு கோவில் அர்ச்சகர் வீட்டில் வளர்ந்து வந்தவள். பின்னர் அவள் பாண்டிய நாட்டுக்குப் போய்விட்டாள். வீர பாண்டியன் இறுதி நாளில் அந்தப் பெண்ணின் வீட்டில்தான் ஒளிந்திருந்தான். ஆதித்த கரிகாலன் பாண்டியனைக் கொல்ல வாளை ஓங்கிய போது நந்தினி குறுக்கிட்டு அவனைக் கொல்ல வேண்டாமென்று மன்றாடினாள். ஆதித்த கரிகாலன் அவளுடைய வேண்டுகோளை உதாசீனம் செய்து வீர பாண்டியனைக் கொன்றான். அது முதல் ஆதித்தனுடைய கனவிலும் நனவிலும் நந்தினியின் கண்ணீர் ததும்பிய முகம் அடிக்கடி தோன்றி அவனை வருத்திக் கொண்டிருந்தது.

அச்சமயம் சோழ சாம்ராஜ்யத்தில் பழுவூர் சிற்றரசர்களான பெரிய பழுவேட்டரையரும் சின்னப் பழுவேட்டரையரும் பேரதிகாரம் படைத்திருந்தார்கள். பல போர்களில் ஈடுபட்டு உடம்பில் அறுபத்து நாலு போர்த் தழும்புகளைப் பெற்றிருந்த பெரிய பழுவேட்டரையர் சோழ நாட்டின் தனாதிகாரி; அவர் வைத்ததே சோழ நாட்டில் சட்டமாக இருந்தது. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சாவூர்க் கோட்டையின் தளபதி. இந்தச் சகோதரர்களின் அனுமதி யின்றி யாரும் சுந்தர சோழரைப் பார்க்கவும் முடியாமல் இருந்தது.






ஆதித்த கரிகாலன் பழுவேட்டரையர்களின் ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த தஞ்சைக் கூச் செல்ல விரும்பவில்லை. காஞ்சியில் அவன் பொன் மாளிகை கட்டி அதில் வந்து சில காலம் தங்கியிருக்கும்படி தந்தைக்கு ஓலை அனுப்பினான். ஓலை எடுத்துச் சென்றவன் வந்தியத்தேவன் என்னும் வீர வாலிபன். அவன் வழியில் தன் தோழன் கந்தமாறனைச் சந்திப்பதற்காகக் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் ஒரு நாள் இரவு தங்கினான். அங்கே ஆதித்த கரிகாலனுக்கு எதிராக நடந்து கொண்டிருந்த சதியைப் பற்றித் தெரிந்துகொண்டான். அவ்விடத்திலேயே ஆழ்வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவனிடம் அவனுக்கு அறிமுகம் ஆயிற்று. இந்த ஆழ்வார்க்கடியான் முதன் மந்திரி அநிருத்தப் பிரும்மராயரின் அந்தரங்க ஒற்றன் என்பது பிற்பாடு தெரிந்தது.

வீர பாண்டியனுடைய மரணத்துக்குச் சில நாளைக்குப் பிறகு நந்தினி வயது முதிர்ந்தவரான பெரிய பழுவேட்டரையரை மணந்து கொண்டாள். அவளுடைய சௌந்தரியத்துக்கும் அவளிடம் இருந்த அபூர்வமான காந்த சக்திக்கும் கிழவர் அடிமையானார். இன்னும் பலரும் அவளுடைய மோகன சக்திக்கு உட்பட்டார்கள். அவளது தூண்டுதலால் கிழவர் ஆதித்த கரிகாலனிடமும் அவனுக்கு உடன் பிறந்தாரிடமும் துவேஷம் கொண்டார். சுந்தர சோழருக்குப் பிறகு ஆதித்த கரிகாலனுக்குப் பதிலாக மதுராந்தகத் தேவனுக்கு முடிசூட்டுவதென்று தீர்மானித்தார். அத் தீர்மானத்துக்குக் கடம்பூர் சம்புவரையர் முதலிய பல சிற்றரசர்களுடைய ஆதரவையும் பெற்றார்.

மதுராந்தகத் தேவன் சுந்தர சோழரின் பெரிய தந்தையான சிவஞான கண்டராதித்தரின் புதல்வன். கண்டராதித்தரின் இரண்டாவது மனைவி செம்பியன் மாதேவி சிவ பக்தியே உருவானவள். கண்டராதித்தர் காலமானபோது மதுராந்தகன் சிறு குழந்தை. அவனைச் சிவபக்திச் செல்வனாகச் செம்பியன் மாதேவி வளர்த்து வந்தாள். மதுராந்தகனும் இள வயதில் சிவ பக்தியில் ஈடுபட்டு உலக வாழ்க்கையில் பற்றற்று விளங்கினான். சின்னப் பழுவேட்டரையரின் மகளை மணந்த பின்னர், நந்தினியின் தூண்டுதலினால் அவனுக்கு சாம்ராஜ்யம் ஆளும் ஆசை உதித்து அது வெறியாக முற்றி முதிர்ந்துவிட்டது.

மதுராந்தகனுடைய சிங்காதன உரிமையைப் பழுவேட்டரையர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் ஆதரித்து நின்றார்கள்.

ஆனால் சோழ நாட்டில் செல்வாக்கு மிகுந்த இன்னும் இரண்டு சிற்றரசர்களான திருக்கோவலூர் மலையமானும் கொடும்பாளூர் பெரிய வேளார் பூதி விக்கிரம கேசரியும் இதை ஏற்றுக்கொள்ள மறுத்து எதிர்த்து. சுந்தர சோழரின் புதல்வர்களின் கட்சியில் உறுதியாக நின்றார்கள்.

இதையெல்லாம் ஓரளவு ஊகித்து உணர்ந்த சுந்தர சோழர் தாம் கண் மூடிய பின் சோழ சாம்ராஜ்யம் சின்னாபின்னம் ஆவதைத் தடுக்க விரும்பினார். அதன் பொருட்டுத் தமது இரு புதல்வர்களையும் தஞ்சைக்குத் தருவித்து ஒரு சமரச ஏற்பாடு செய்துவிட ஆசைப்பட்டார். மதுராந்தகனுக்கே சிம்மாசனத்தை உரிமையாக்கிவிடவும் அவர் சித்தமாயிருந்தார். அதை மதுராந்தகனுடைய அன்னையாகிய செம்பியன்மா தேவி ஒப்பவில்லை. மதுராந்தகனுடைய மனத்தை இராஜ்ய ஆசையிலிருந்து திருப்ப அந்த மூதாட்டி முயன்றாள்.

தஞ்சைக்கு ஓலை எடுத்துச் சென்ற வந்தியத்தேவன் வழியில் குடந்தை ஜோதிடரின் வீட்டில் இளையபிராட்டி குந்தவையைச் சந்தித்தான். முதல் சந்திப்பிலேயே அவர்கள் ஒருவர் மேல் ஒருவர் அன்பு கொண்டனர். பிறகு அன்பு வளர்வதற்குச் சில சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன. குந்தவையின் விருப்பத்தின்படி வந்தியத் தேவன் கடல் கடந்து இலங்கை சென்றான். அருள்மொழிவர்மனைச் சந்தித்து அவனிடம் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான்.

"பொன்னியின் செல்வ! இராஜ்யத்துக்குப் பேராபாயம் வந்திருக்கிறது. உடனே புறப்பட்டு வரவும்" என்று அதில் எழுதியிருந்தது. இளையபிராட்டியிடம் அளவிலாத பக்தி விசுவாசம் கொண்டிருந்த இளவரசன் உடனே புறப்பட ஆயத்தமானான். ஆனால் அதே சமயத்தில் அவனுக்கு இன்னும் இரு அழைப்புக்கள் வந்திருந்தன. ஆதித்த கரிகாலன் அனுப்பிய பார்த்திபேந்திரன் அவனைக் காஞ்சிக்கு அழைத்துச் செல்ல விரும்பினான். சுந்தர சோழரின் அநுமதியின் பேரில் பழுவேட்டரையர்கள் இளவரசனைச் சிறைப்படுத்திக் கொண்டு வரக் கப்பல்களை அனுப்பியிருந்தார்கள். இளையபிராட்டி குந்தவையிடம் குரோதம் கொண்டிருந்த பழுவேட்டரையர்கள் பொன்னியின் செல்வன் குந்தவையைச் சந்திப்பதை விரும்பவில்லை.

இளவரசன் அருள்மொழி வர்மன் தந்தையின் கட்டளைக்கே முதல் மரியாதை செலுத்த விரும்பிப் புறப்பட்டான். வழியில் நடுக் கடலில் சுழற் காற்று விபத்துக்குக் கப்பல்கள் உள்ளாயின. வந்தியத்தேவனைக் காப்பாற்றுவதற்காகப் பொன்னியின்செல்வன் கப்பலிலிருந்து கொந்தளித்த கடலில் குதிக்க நேர்ந்தது. இருவரும் பூங்குழலி என்னும் ஓடக்காரப் பெண்ணால் காப்பாற்றப்பட்டார்கள்.

நடுக் கடலில் மிதந்த போதே இளவரசன் கொடிய குளிர்க் காய்ச்சலுக்கு உள்ளானான். அவனைப் பூங்குழலியும் அவளுடைய அத்தை மகன் சேந்தன் அமுதனும் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

வந்தியத் தேவன் இந்தச் செய்தியைப் பழையாறையிலிருந்த குந்தவைப் பிராட்டியிடம் தெரிவித்தான். அதே சமயத்தில் ஆதித்த கரிகாலனைக் கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்கு விருந்துக்கு அழைத்திருப்பதாகவும் தெரிய வந்தது. அவ்விருந்துக்குப் பெரிய பழுவேட்டரையர் நந்தினியுடன் போவதாகவும் செய்தி கிடைத்தது. இந்தச் சந்திப்பினால் ஏதாவது விபரீதம் நேரிடக் கூடும் என்று குந்தவை

வும் அநிருத்தரும் அஞ்சினார்கள். கூடுமானால் அந்தச் சந்திப்பைத் தடுக்கவும், தடுக்க முடியாவிட்டால் ஆதித்த கரிகாலருடன் உடனிருந்து பாதுகாக்கவும் வந்தியத்தேவனை அனுப்பினார்கள்.

வந்தியத்தேவன் அன்றிரவு திருப்புறம்பயம் கிராமத்துப் பள்ளிப்படைக் காட்டில் மற்றொரு பெரும் மர்மமான சதியைப் பற்றி ஓரளவு அறிந்து கொண்டான். அங்கே நந்தினியும் ரவிதாஸன் முதலிய மந்திரவாதிகளும் இருந்தார்கள். ஒரு சின்னஞ்சிறு பிள்ளையும் இருந்தான். அந்தப் பிள்ளையைச் சிம்மாசனத்தில் அமர்த்தினார்கள். மற்றவர்கள் அவனைச் சூழ்ந்திருந்து சபதம் எடுத்துக் கொண்டார்கள். அந்தப் பிள்ளையிடம் ஒளி வீசிய கூரிய வாள் ஒன்று அளித்தார்கள். அந்த வாளை அவன் நந்தினியிடம் கொடுத்தான். நந்தினி சபதத்தைத் தானே நிறைவேற்றுவதாக ஒப்புக் கொண்டாள்.




ரவிதாஸன் முதலியவர்கள் வந்தியத்தேவனை அங்கேயே பலி கொடுத்துவிட விரும்பினார்கள். ஆனால் நந்தினி அதைத் தடுத்தாள். அவனை அவ்விடத்திலேயே கட்டிப் போட்டு விட்டுச் சென்றார்கள். ஆழ்வார்க்கடியான் காளாமுக சைவன் வேடம் தரித்து வந்து வந்தியத்தேவனை அங்கிருந்து அழைத்துச் சென்றான்.

காளாமுகர் கூட்டத்துக்குத் தன்னந் தனியாகப் புறப்பட்ட மதுராந்தகனை வழியில் குதிரை மிரண்டு தள்ளி விட்டுப் போய் விட்டது. மரத்தடியில் விழுந்து கிடந்த மதுராந்தகனை முதன் மந்திரி அநிருத்தர் எடுத்து அழைத்துச் சென்றார்.

குந்தவையும் வானதியும் நாகைப்பட்டினத்துக்கு அருகிலிருந்த ஆனைமங்கலத்துக்குச் சென்றார்கள். நந்திமண்டபம் என்னுமிடத்தில் அவர்கள் இளவரசன் அருள்மொழிவர்மனைச் சந்தித்தார்கள். நாட்டின் குழப்பமான நிலைமை முன்னிட்டு இன்னும் சில நாட்கள் இளவரசன் சூடாமணி விஹாரத்திலேயே இருக்க வேண்டும் என்று குந்தவை வற்புறுத்தினாள். அவர்கள் மூவரும் கலகல வென்று சிரித்து மகிழ்வதைச் சற்றுத் தூரத்தில் கால்வாயில் படகிலிருந்த பூங்குழலி கேட்டு மனம் எரிந்தாள். சேந்தன் அமுதன் அவளைச் சாந்தப்படுத்துவதற்கு முயன்றான்.

பொன்னியின் செல்வன் கடலில் மூழ்கிவிட்டதாகப் பரவிய வதந்தியினால் சோழ நாடு முழுவதும் அதற்கு அப்பாலும் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது.

## முதல் அத்தியாயம்

# கெடிலக் கரையில்

திருமுனைப்பாடி நாட்டை வளப்படுத்திய இனிய நீர்ப் பெருக்குடைய நதிகளில் கெடிலம் நதியும் ஒன்று. அப்பர் பெருமானை ஆட்கொண்ட இறைவன் எழுந்தருளியிருந்த திருவதிகை வீரட்டானம் இந்த நதிக் கரையில் இருக்கிறது. சுந்தரமூர்த்தியைத் தடுத்தாட்கொண்ட பெருமான் வாழும் திருநாவலூர் இந்நதியின் அருகிலேதான் இருக்கிறது. இந்த இரண்டு க்ஷேத்திரங்களுக்கும் மத்தியில் தொண்டை நாட்டிலிருந்து நடு நாட்டுக்கும் சோழ நாட்டுக்கும் செல்லும் இராஜ பாட்டை அந்த நாளில் அமைந்திருந்தது. இராஜபாட்டை கெடில நதியைக் கடக்கும் துறை எப்போதும் கலகலவென்று இருக்கும். நதிக் கரையில் உள்ள மரங்களில் பறவைகளின் குரல்களும் அவை இறகை அடித்துக் கொள்ளும் சத்தமும் கேட்டுக் கொண்டிருக்கும். பிரயாணிகள் அங்கே வண்டிகளிலிருந்து மாட்டை அவிழ்த்து விட்டு விட்டுக் கட்டுச் சாதம் உண்பார்கள். உண்ணும் போது அவர்கள் விளையாட்டாக வானில் எறியும் சோற்றைக் காக்கைகள் வந்து அப்படியே கொத்திக் கொண்டு செல்லும். நதியின் வெள்ளத்தில் தவறி விழும் சோற்றை மீன்கள் வந்து கொத்திக் கொண்டு போகும். இவற்றையெல்லாம் பார்க்கும் இளம் சிறுவர்கள் கைதட்டி ஆரவாரித்தும் 'ஆஹா!' என்று வியப்பொலிகள் செய்தும், கலகலவென்று சிரித்தும், தங்கள் குதூகலத்தை வெளியிடுவார்கள்.

ஐப்பசி மாதம் ஆரம்பத்தில் கெடில நதியில் வழக்கத்தைவிட அதிகமாகவே

வெள்ளம் போய்க் கொண்டிருந்தது. இதனால் உச்சி வேளையில் அங்கே கட்டுச் சாதம் அருந்துவதற்காகத் தங்கிய பிரயாணிகளின் ஆரவார ஒலிகளும் அதிகமாயிருந்தன. அந்த ஒலிகளெல்லாம் அமுங்கிப் போகும்படியான ஒரு பெரும் ஆரவாரம் திடீரென்று சற்றுத் தூரத்தில் சாலையில் எழுந்தது கேட்டுப் பிரயாணிகள் வியப்புற்றார்கள். அவர்களில் சிலர் கரையிலேறிப் பார்த்தார்கள். முதலில் புழுதிப் படலம் மட்டுமே தெரிந்தது. பிறகு யானை, குதிரை, பல்லக்கு, பரிவட்டம் ஏந்துவோர் முதலிய இராஜ பரிவாரங்கள் வருவது தெரிந்தது. சிறிது அருகில் அப்பரிவாரங்கள் நெருங்கி வந்ததும் கட்டியக்காரர்களின் முழக்கம் தெளிவாகக் கேட்டது.

"பன்னிரண்டாம் பிராயத்தில் போர்க்களம் புகுந்த வீராதி வீரர், வீர பாண்டியன் தலைகொண்ட கோப்பரகேசரி, இரட்டை மண்டலத்தார் சொப்பனத்தில் கண்டு அஞ்சும் சிங்கம், தொண்டை மண்டலாதிபதி, வடதிசை மாதண்டநாயகர், மூன்று உலகமுடைய சுந்தர சோழ சக்கரவர்த்தியின் திருமகனார், ஆதித்த கரிகால சோழ மகாராஜா வருகிறார்! பராக்!"

இடி முழக்கக் குரலில் எட்டுத் திசையும் எதிரொலி செய்யும்படி எழுந்த இந்தக் கோஷத்தைக் கேட்டதும் கெடில நதித்துறையில் இருந்தவர் அனைவரும் அவசர அவசரமாகக் கரையேறினார்கள். அத்தகைய வீராதி வீரனைக் காண வேண்டுமென்ற ஆவலுடன் நதித்துறையில் நடுவில் வழி விட்டு விட்டு இருபுறமும் அவர்கள் ஒதுங்கி நின்றார்கள்.

கட்டியக்காரர்கள், எக்காளம் ஊதுவோர், பரிச்சின்னம் ஏந்துவோர் ஆகியவர்கள் முதலில் வந்து தண்ணீர்த் துறையை அடைந்தார்கள்.

பரிவாரங்களுக்குப் பின்னால் மூன்று குதிரைகள் ஒன்றின் பக்கம் ஒன்றாக வந்தன. மூன்று குதிரைகள் மீதும் மூன்று இளம் வீரர்கள் வீற்றிருந்தார்கள். அவர்களைத் தூரத்தில் பார்த்த போதே ஜனங்கள் அவர்களைச் சுட்டிக் காட்டி இன்னார் இன்னவர் என்று பேசத் தொடங்கினார்கள். "நடுவில் உள்ள குதிரை மீது வருகிறவர்தான் ஆதித்த கரிகாலர்! பொற் கிரீடத்தைப் பார்த்தவுடனே தெரியவில்லையா? வெய்யில் படும்போது எப்படி அக்கிரீடம் ஜொலிக்கிறது!" என்றான் ஒருவன்.

"இந்தக் கிரீடத்தைப் போய்ச் சொல்லப் போகிறாயே? கரிகால் வளவன் அணிந்திருந்த மணி மகுடத்தை இவர் சிரஸில் தாங்கும்போதல்லவா பார்க்க வேண்டும்? அது கோடி சூரியப் பிரகாசமாகக் கண்கள் கூசும்படி ஜொலிக்குமாம்!" என்றான் இன்னொருவன்.

"அது கரிகால் வளவன் கிரீடம் அல்ல, தம்பி! அப்படிச் சம்பிரதாயமாகச் சொல்வதுதான். பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் செய்த மணி மகுடத்தைத்தான் இப்போது சுந்தர சோழர் அணிந்திருக்கிறார். இன்னும் எத்தனை நாளைக்கோ தெரியவில்லை!" என்றான் மற்றொருவன்.

"சுந்தரசோழரின் வாழ்நாளை இப்படித்தான் சில காலமாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அவர் சிரஞ்சீவியாயிருப்பார் என்று தோன்றுகிறது!" என்றான் முதலில் பேசியவன்.

"நன்றாயிருக்கட்டும். அவர் உயிரோடிருக்கும் வரையில் நாடு நகரமெல்லாம் குழப்பமில்லாமல் இருக்கும்!"

"அப்படியும் சொல்லுவதற்கில்லை. பொன்னியின் செல்வனைக் கடல் கொண்டு விட்டதாகச் செய்தி வந்ததிலிருந்து சோழ நாடெங்கும் துரே



அல்லோல கல்லோலமாயிருக்கிறதாம். எப்போது சண்டை மூளுமோ என்று அங்கிருந்து வந்தவர்கள் எல்லாம் சொல்லி வருகிறார்கள்.''

''யாருக்கும் யாருக்கும் சண்டை? எதற்காகச் சண்டை?''

''பழுவேட்டரையர்களுக்கும் கொடும்பாளூர் வேளாருக்கும் சண்டை மூளும் என்று சொல்கிறார்கள். அப்படியொன்றும் ஏற்படாமல் தடுப்பதற்காகத்தான் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் சிற்றரசர்கள் கூடுகிறார்களாம். ஆதித்த கரிகாலரும் அங்கேதான் போகிறாராம்.''

''குதிரைகள் நெருங்கி வந்து விட்டன. இரைந்து பேசாதீர்கள்!'' என்று ஒருவன் எச்சரித்துவிட்டு, ''இளவரசர் ஆதித்த கரிகாலரின் முகம் எவ்வளவு வாட்டம் அடைந்திருக்கிறது, பார்த்தாயா?'' என்று கேட்டான்.

''அவர் முகம் வாட்டம் அடைந்தில்லாமல் எப்படி இருக்கும்? ஆதித்த கரிகாலருக்குத் தம்பியின் பேரில் பிராணன். அப்படிப்பட்ட தம்பியைப் பற்றித் தகவல் தெரியவில்லையென்றால் தமையனுக்கு வருத்தமாயிராதா? தந்தையோ நடமாட்டம் இல்லாமலிருக்கிறார்!''

''இதெல்லாம் உலகத்தில் இயற்கை, தம்பி! இளவரசருடைய முகவாட்டத்துக்குக் காரணம் இவையெல்லாம் அல்ல. இரட்டை மண்டலத்தார் மீது படையெடுத்துப் போகவேண்டும் என்று கரிகாலருக்கு ஆசை. அது கைகூடவில்லையே என்றுதான் கவலை!''

''அது ஏன் கைகூடவில்லை? யார் இவரைப் படையெடுத்துப் போக வேண்டாம் என்று தடுக்கிறார்கள்!''

''வேறு யார்? பழுவேட்டரையர்கள்தான்! படையெடுப்புக்கு வேண்டிய தளவாட சாமக்கிரியைகள் கொடுக்க மறுக்கிறார்களாம்!''

''ஏதேதோ இல்லாத காரணங்களையெல்லாம் கற்பித்துச் சொல்லுகிறார்கள். உண்மைக் காரணம் உங்கள் ஒருவருக்கும் தெரியவில்லை'' என்றான் ஒருவன்.

''எல்லாம் தெரிந்தவனே! உண்மைக் காரணத்தை நீதான் சொல்லேன்!'' என்று இன்னொருவன் கேட்டான்.

'' ஆதித்த கரிகாலர் யாரோ ஒரு பாண்டிய நாட்டுப் பெண் மீது காதல் கொண்டிருந்தாராம். இளவரசர் வடபெண்ணைப் போருக்குச் சென்றிருந்த போது பெரிய பழுவேட்டரையர் அப்பெண்ணை மணந்து கொண்டு விட்டாராம். அவள்தான் இப்போது பழுவூர் இளைய ராணியாக விளங்கிச் சோழ நாட்டில் சர்வாதிகாரம் செலுத்துகிறாள். அதிலிருந்து ஆதித்த கரிகாலரின் மனமே பேதலித்துப் போய் விட்டதாம்!''

''இருக்கலாம்; இருக்கலாம். உலகத்தில் எல்லாச் சண்டைகளுக்கும் யாராவது ஒரு பெண்தான் காரணமாயிருப்பாள் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள் அல்லவா?''

''எந்தப் பெரியவர்கள், தம்பி, அப்படிச் சொல்லியிருக்கிறார்கள்? சுத்தப் பைத்தியக்காரத்தனம்! இளவரசர் ஒரு பெண்ணை விரும்பினார் என்றால், அவள் போய் ஓர் அறுபது வயதுக் கிழவனை மணந்து கொள்ளுவாளா? சொல்லுகிறவர்கள் சொன்னால் கேட்பவர்களுக்கு மதி இல்லையா?''

'' அப்படியானால் ஆதித்த கரிகாலருக்கு இன்னும் கலியாணம் ஆகாமலிருப்பானேன்? நீர்தான் சொல்லுமே?''

''சும்மா இருங்கள்! இதோ நெருங்கி வந்து விட்டார்கள். இளவரசருக்கு வலது புறத்தில் வருகிறவன்தான் பார்த்திபேந்திர பல்லவன் போலிருக்கிறது. இடது புறத்தில் வருகிறவன் யார்? வாணர் குலத்து வந்தியத்தேவனா?''

''இல்லை; இல்லை! கடம்பூர் சம்புவரையர் மகன் கந்தமாறன். ஓலை கொடுத்து அனுப்பினால் இளவரசர் ஒரு வேளை வரமாட்டார் என்று சம்புவரையர் தம் மகனையே அவரை அழைத்து வர அனுப்பியிருக்கிறார்.''

''இதிலிருந்தே, ஏதோ விஷயம் மிக முக்கியமானது என்று தெரிகிறது.''

''அந்த முக்கியமான விஷயம் இராஜரீக சம்பந்தமானதாகவும் இருக்கலாம். அல்லது கல்யாண சம்பந்தமானதாகவும் இருக்கலாம். ஆதித்த கரிகாலருக்குத் திருமணம் ஆகாதிருக்கும் வரையில் சிற்றரசர்கள் அவரை வலை போட்டுப் பிடிக்க முயன்று கொண்டுதான் இருப்பார்கள். முதன் முதலில் அவரை மணந்து கொள்ளும் பெண் சோழ சாம்ராஜ்யத்தின் சிங்காதனத்தில் அமரும் பாக்கியம் பெறுவாள் அல்லவா?''

மேற்கண்டவா றெல்லாம் கெடில நதிக்கரையில் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்ற ஜனங்கள் பலவிதமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மூன்று குதிரைகளும் வந்து தண்ணீர்க் கரையோரம் நின்றன.

குதிரைகளுக்குப் பின்னால் வந்த ரதம் சற்று அப்பால், அரச மரத்தடியில் நின்றது. அந்த ரதத்தில் எண்பது பிராயமான வீரக் கிழவர் இருக்கோவலூர் மலையமான் இருந்தார்.

தண்ணீர்க் கரை ஓரத்தில் குதிரை மேலிருந்த வண்ணம் ஆதித்த கரிகாலன் திரும்பி அவரைப் பார்த்தான்.

(தொடரும்)

# ஆறு கைகள் இருந்தாலும் போறாது போலிருக்கே!

## ஒரு Prestige பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் வாங்கிவிடுங்கள்!



**பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் உங்கள் பொன்னான சமையல் நேரத்தில் ஒருமணி மிச்சமாக்குகிறது**

சமையல் பிரச்சனையை எளிதாக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர். பிரஸ்டிஜ் சமையல் வழக்கமான சமையலுக்காகும் நேரத்தில் கால்பங்கு நேரத்திலே தயார். அது எளிதானது. அத்துடன் பத்திரமானதும்கூட. 12 வயது சிறுமிகூட கையாளலாம். எரிபொருள் செலவில் எத்தனையோ மிச்சம். பிரஸ்டிஜ் இருந்துவிட்டால் சமைக்கும்போது குழப்பமோ, தடுமாற்றமோ இருக்காது. ஏனெனில் அதில் ஒரே சமயத்தில் மூன்றுவகை சமைக்கலாம். பிரஸ்டிஜில் தயாரான உணவில் சத்து, ருசி, மணம் முதலியவை குறைவதில்லை. பிரஸ்டிஜ் ஆயுட்கால உத்தரவாதம் கொண்டது. நாடெங்கும் விற்பனைக்குப் பின்பும் பராமரிப்புக்கு வசதி யுள்ள பிரஷர்குக்கர் பிரஸ்டிஜ் ஒன்றே.

பிரஸ்டிஜ் ஐந்து அளவுகளில் உள்ளன. உங்கள் குடும்பத்திற்கு தேவையான அளவை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.

பெயர்கள் வேறானாலும் ப்ரீத், பிரஸ்டிஜ் இரண்டும் ஒன்றே. இந்தியாவில் பிரஸ்டிஜ், ஏற்றுமதிக்கு ப்ரீத்.

புகழ்பெற்ற ப்ரீத் ஸ்டிம் இட், ஸ்கில்லெட், ஸாஸ்பான் - சமையல் விரைவாகவும் எளிதாகவும் முடிய இவைகள் உதவுகின்றன.

டிடி (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர்-16.

TTP 5799



# அன்பைக் கொடுங்கள்!

"என்னுடைய பத்தாவது வயதில் தொழுநோயின் அறிகுறிகள் என் உடலின் சில பகுதிகளில் தென்பட்டன. தந்தையை இழந்துவிட்ட எனக்கு என் அன்னைதான் ஒரே ஆறுதல். என் தாயிடம் இந்த உண்மையை எடுத்துரைத்த போது அவர் நம்ப மறுத்து விட்டார். எனக்கும் என் சகோதரிக்கும் சமைத்துப் போட்டு விட்டுக் கோயில், குளம் என்று போய்க் கொண்டிருந்த அம்மா, எனக்கு இப்படி ஒரு நோய் வரக்கூடும் என்று நம்பத் தயாராயில்லை! நான் உள்ளூற வேதனையில் குமைந்து கொண்டிருந்தேன். வீதியில் இவ்வியாதிக்காரர்களைப் பார்க்கும் போது என் மனம் புழுங்கித் தவிக்கும்.

"நான் வளரவளர என் வியாதியும் வளர்ந்தது. சிதம்பரத்தில் உள்ள கல்லூரியில் நான் ஆனர்ஸ் (ஆங்கில இலக்கியம்) இறுதி வகுப்பில் படித்துக் கொண்டிருந்த போது என் நோயை நினைந்து உருகியவாறு வறுமையுடன் போராட வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்பட்டது. பூர்வீகச் சொத்து கொஞ்ச நஞ்சம் இருந்ததையும் விற்று ஒருவாறு படிப்பை முடித்துப் பட்டம் பெற்றேன். ஆனால், வேலைக்கு மனுப் போட்ட நிலையில் தான், என் நோய் வேலை வாய்ப்புகளுக்கு எதிராகக் குறுக்கிட்டதை உணர்ந்தேன். அக்காலத்தில் (1926) மருத்துவர்களுக்கே இந்நோய் பற்றிய உண்மைகள் சரிவரத் தெரிந்திருக்க வில்லை. அந்த நிலையில் எனக்குச் சிகிச்சை அளித்த டாக்டர் பி. வைத்திய நாதனையும், என் நோய் தொற்றிக் கொள்ளும் தன்மையதன்று எனச் சான்றிதழ் வழங்கிய டாக்டர் காக்ரனையும் என்றும் என்றுமே மறக்க இயலாது" என்கிறார் பத்மஸ்ரீ டி. என். ஜகதீசன்.

காந்திஜி, மகாகனம் சாஸ்திரியார், தக்கர் பாபா, தேவதாஸ் காந்தி ஆகிய பல தேச பக்தர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்ற திரு ஜகதீசன் ஒரு சிறந்த தேசபக்தர், நூலாசிரியர், விரிவுரையாளர், சமூக சேவகர்; இதற்கெல்லாம் மேலாக, குஷ்ட ரோகத்தினால் பீடிக்கப்பட்டவர்களின் நல்வாழ்வுக்காகத் தம் வாழ்க்கையையே அர்ப்பணித்துக் கொண்டவர். "க்ஷய ரோகத்தினால் பீடிக்கப் பட்ட ஒருவனை அவன் ஒரு 'டி.பி.' என்று யாரும் கூறுவதில்லை. மூல நோயினால் அவதிப் படுகிறவனை 'பைல்ஸ்' என்று நாம் அழைப்ப தில்லை. ஆனால் குஷ்ட ரோகத்தால் துன்பப் படுகிறவனை ஆங்கிலத்தில் 'லெப்பர்' (Leper) என்று குறிப்பிடுகிறோம்! சமூக விரோதமான செயல்களில் ஈடுபடுகிறவனை 'சோஷியல் லெப்பர்' என்று குறிப்பிடுகிறோம். பார்க்கப் போனால், க்ஷயரோகம், மஞ்சள் காமாலை, சொறி சிரங்கு ஏன் ஜலதோஷம் பற்றிப் பரவும் அளவுக்குக்கூடக் குஷ்டநோய் தொற்றிப் பரவுவதில்லை. இந்நோய் கண்டவர்களுக்கு மட்டும் சமூகம் ஏனோ இவ்வளவு இழுக்கை உண்டு பண்ணி விட்டது!" என்று வேதனையோடு கூறுகிறார் திரு ஜகதீசன்.

"அப்படியானால் இது நேரிடைத் தொடர்பு காரணமாகவோ, காற்று, நீர் மூலமோ பெருமளவுக்குப் பரவும் தன்மையதன்று என்று கூறுகிறீர்களா?"

"ஒரு வகைக் கிருமிகளால் தோன்றும் இந்நோய் இரு வகைப்படும். தொற்றிப் பரவும் வகை இருபது சதம்; தொற்றிக் கொள்ளாதது எண்பது சதம். இது பரம் பரையாக வரும் (Hereditary) வியாதி அல்ல

மேலே: சென்னை ரோட்டரி சங்கத்தினர் வழங்கியுள்ள பரிசைத் திரு ஜகதீசன் மத்திய சுகாதார மந்திரி திரு கே. கே. ஷாவிடமிருந்து பெறுகிறார்.



இங்கே: செங்கல்பட்டு, தொழு நோய் ஒழிப்பு மத்தியக் கழகத்தில் பணியாற்றும் டாக்டர் தர்மேந்திராவுக்கு 1970ம் ஆண்டுக்குரிய தாமியன்-தட்டன் விருது கிடைத்துள்ளது. தொழு நோய் ஒழிப்புப் பணிக்காக அமெரிக்காவில் வழங்கப்பெறும் தலைசிறந்த உலகச் சிறப்பு இந்த விருது. டாக்டர் ஆலிவர் ஹாஸல் பினாடு, டாக்டர் தர்மேந்திரா, தவத்திரு ஜோசப் ஜே. வால்ட்டர் ஆகியோரைப் படத்தில் காண்கிறோம்.

என்பது நினைவுறத்தக்கது. தொற்றும் நோய் கண்டவர்களுடன் பதினைந்து வயதுக்குட்பட்ட சிறுவர்கள் நெருங்கிப் பழகக் கூடாது. பதினைந்து வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு அநேகமாய் இந்நோய் தொற்றுவதில்லை. வியாதி தொற்றிய பிறகு ஆறு மாதங்கள் முதல் பல வருடங்கள் வரை உடலில் ஊறிப் பிறகு வெளியே தெரியலாம். நோய்கண்டவர்கள் வெட்கப்பட்டோ, சமூகத்துக்குப் பயந்தோ அதனை மூடி மறைத்து வாளாவிருக்காமல் உடனடியாகச் சிகிச்சை செய்து கொண்டால் பூரண குணம் பெறலாம். 'சல்போன்' (D. D. S.) சிகிச்சை மிகச் சிறந்த பலனளித்து வருகிறது.''

''இந்நோய் கண்டதற்கான ஆரம்ப அறிகுறிகள் என்ன ?''

''தோலைப் பற்றும் வகையைச் சேர்ந்த அதாவது தொற்றும் தன்மையுள்ள நோய் கண்டவர்களுக்குச் சிவந்த தேமல் போன்ற படைகள் உடலின் பல பாகங்களிலும் காணப்படும். சிறிது பளபளப்பு இருக்கும். சொர சொரப்பாக இராது. இந்த வகையில் அநேகமாக உணர்ச்சி பாதிக்கப்படுவதில்லை. நரம்பைப் பற்றும் — அதாவது தொற்றாத வகையில் ஒன்று படைகளுடன் ஆரம்பிக்கும். மற்றொன்று படைகள் ஏதுமின்றி, உணர்ச்சிக் குறைவை ஏற்படுத்தும். படைகள் சொர சொரப்பாகத் தடித்தும் இருக்கும். ஊசி குத்தினாலும், நெருப்புச் சுட்டாலும் இந்தப் படைகளில் உணர்ச்சி இல்லாமல் இருக்கும். வியர்வை இராது. படைகளே இல்லாமல் ஏற்படுவது இன்னொரு வகை.

''நோயாளிகளின் அசட்டையும் கவனக் குறைவுமே இந்நோய் கடுமையாகப் பரவக் காரணமாகும். நவீன சிகிச்சை முறைகள் உள்ளதை மக்களுக்கு எடுத்துரைத்துப் பிரசாரம் செய்து, நோயாளிகளைக் குணப்படுத்திப் பிறகு அவர்களின் நல்வாழ்வுக்கு உகந்த வழிகளைச் செய்து வருகிறது இந்திய குஷ்ட நிவாரணச் சங்கம். காந்தியடிகள் விரும்பிச் செய்த தொண்டு இது. தமது ஆசிரமத்துக்கு அருகிலேயே குஷ்டநோய் கண்டவர்களுக்குக் குடில் அமைத்து அவர் தொண்டாற்றி வந்ததுதான் பிரசித்தம் ஆயிற்றே? நான் இந்தத் தொண்டினை மேற்கொள்ள விழைந்த போதுதான் மகாத்மாவின் ஆசியும் தொடர்பும் எனக்குக் கிட்டின.''

'' எப்போது ?''

''1945ல் டாக்டர் காக்ரனுடன் சேவா கிராமம் சென்று காந்தியடிகளைச் சந்தித்தேன். (டாக்டர் காக்ரன் செங்கல்பட்டு குஷ்ட நோய் மருத்துவ மனையில் பிரதம மருத்துவராகப் பணியாற்றி வந்தவர்) அப்போது காந்திஜி, 'நீங்கள் சிரத்தை நிரம்பியவனுக்கே மேலும் சிரத்தை ஊட்டும் திறன் படைத்திருக்கின்றீர்கள்.... நீர் இங்கு தங்கலாம். உமக்கே இந்நோயின் அநுபவம் ஓரளவு ஏற்பட்டு, அதிலிருந்து குணம் அடைந்ததன் மூலம் இச்சேவையில் உமக்கு ஆர்வம் ஏற்பட்டுள்ளது என்பதை உணர்ந்த பின், இது கடவுள் எனக்கு அளித்த இரட்டை பாக்கியம் என்று கருதுகிறேன்' என்று கூறியதை என்னால் மறக்கவே இயலாது''

என உணர்ச்சியோடு நினைவுகூர்கிறார், திரு ஜகதீசன்.

மதுரைக் கல்லூரியிலும், ஆலவாய் யூனியன் கிறிஸ்தவக் கல்லூரியிலும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் ஆங்கில விரிவுரையாளராகப் பணியாற்றிய திரு ஜகதீசன் மகாகனம் சாஸ்திரியாரிடம் நெருங்கிப் பழகி, அன்னாரின் அன்புக்குப் பாத்திரமானவர். அவர் எழுதியுள்ள 'சாஸ்திரியார் வாழ்க்கை வரலாறு' ஒரு நல்ல ஆங்கில இலக்கிய நூலாகும். திரு ஜகதீசன் இயற்றியுள்ள வேறு பல ஆங்கில நூல்களும் பி.ஏ., இண்டர் வகுப்புகளுக்குப் பாடப் புத்தகமாக இருந்து வந்துள்ளன. கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் இவரது மாணவர்.

திரு தேவதாஸ் காந்தி, இந்திய குஷ்ட நிவாரண சங்கத்தின் சென்னைக் கிளைக்கு அவ்வப்போது விஜயம் செய்ததுண்டு. அவர் வருகை புரிந்தபோது நிகழ்ந்த ஒரு சுவையான சம்பவத்தைக் குறிப்பிடுகிறார் திரு ஜகதீசன். ''இந்திய அரசு ஊழியர் ஒருவருக்கு இந்நோய் கண்டிருந்தது. தொற்றிக்கொள்ளாத வகைதான். எனினும் குடும்பத்தில் பிரிவு ஏற்பட்டு விட்டது. மனைவி தன் கணவனைப் பிரிந்து, பிறந்த வீடு சென்றாள். நோய் கண்டவரின் வேலைக்கும் ஆபத்து வந்து விட்டது. அவருக்குச் சிகிச்சை அளித்துக் குணப்படுத்தி அவர் இழந்திருந்த உத்தியோகத்தை மீட்டுத் தரும் பணியை மேற்கொண்டேன் நான். நீண்ட கால சிகிச்சைக்குப் பின் நோய் குணப்பட்டது. இவரது நோயினால் சக ஊழியர்கள் யாரும் பாதிக்கப்பட மாட்டார்கள் என்று மருத்துவ அதிகாரிகளிடம் சான்றிதழ் வாங்கி, அவர் இழந்த பதவியையும் திரும்பப் பெற்றுக் கொடுப்பதில் நான் வெற்றியடைந்தேன். தம்பதியரை மீண்டும் ஒன்றுசேர்ப்பது என் அடுத்த முயற்சி.

''அன்று தீபாவளி. குணமடைந்துவிட்ட குறிப்பிட்ட அந்த அரசு ஊழியரைத் தீபாவளி கொண்டாட என் வீட்டுக்கு அழைத்திருந்தேன். அவரும் வந்தார். அவரது மாமனாரும் மனைவியும் கூட என் அழைப்பை ஏற்று என் இல்லத்துக்கு வந்து சேர்ந்தனர். விடியற்காலையில் அவர் ஸ்நானம் செய்ததும் அவருக்கென நான் வாங்கி வைத்திருந்த துணிமணிகளை வழங்குவதற்காக உள்ளேயிருந்து எடுத்து வரச் சொன்னேன். நான் அவற்றைக் கையில் வாங்கிக் கொண்டதும் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. எதிர்பாராத விதமாக திரு தேவதாஸ் காந்தி உள்ளே நுழைந்தார், என் குடும்பத்தினருக்குத் தீபாவளி வாழ்த்துக் கூற! நிகழ்ந்த விவரங்களை அவருக்கு எடுத்துரைத்து 'உங்கள் கையாலேயே இத்துணிமணிகளை இவருக்கு அளிக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டேன். திரு தேவதாஸ் மகிழ்ச்சியுடன் அதைச் செய்தார். அந்த அரசு ஊழியர் இன்றும் அதே காரியாலயத்தில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார். ஒன்று கூடிய அவரது இல்லத்திலும் மகிழ்ச்சி நிலவுகிறது!''

இந்திய குஷ்ட நிவாரண சங்கத்தின் அமைப்புச் செயலாளராகவும், மழுவந்தாங்கலில் உள்ள கஸ்தூரிபாய் குஷ்ட நிவாரண நிலையத்தின் கௌரவச் செயலாளராகவு-

# உங்கள் குழந்தையின் வளர்ச்சிவேகத்திலே பரிபூரணமான திருப்தி காண்கிறீர்களா?

**சுயேச்சையான டாக்டர்கள் தரும் இந்த அறிக்கையைப் படியுங்கள்**

'எல்லாக் குழந்தைகளுக்கும் லீவர்ஸ் குழந்தை உணவு தரப்பட்டது...நம்மவர் குழந்தைகள் ஐரோப்பிய, அமெரிக்கக் குழந்தைகளுக்கு ஈடான வளர்ச்சியை நிரூபித்தன... 5-6 மாதங்களிலே எடை இரு மடங்குக்கு மேலாகியது, ஒரு வயதிற்குள் மும் மடங்கை மிஞ்சிவிட்டது.'*

பாரத நாட்டுக் குழந்தைகளுக்கென்றே ஆக்கம்பெற்றது லீவர்ஸ் குழந்தை உணவு.

*அறிக்கையின் ஒரு பகுதியே இது. முழு அறிக்கையின் இலவசப் பிரதிக்கு

எழுதுங்கள் : நியூ ஃபுட்ஸ், இந்துஸ்தான் லீவர் லிமிடெட்., போஸ்ட் பாக்ஸ் 995, பம்பாய்-1.




## லீவர்ஸ் குழந்தை உணவு

தலைசிறந்த டாக்டர்களால் தகுதி நிரூபணம் பெற்ற பாலுணவு

லின்டாஸ்-LF,14-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

அரும் பணியாற்றிவரும் பேராசிரியர் டி.என். ஜகதீசன் உலகம் சுற்றியவர். உலகின் பல்வேறு நாடுகளில் நிகழும் மாநாடுகளில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றியுள்ளார். போப்பாண்டவரையும் தரிசித்து அவரது ஆசியைப் பெற்றுள்ளார். 1957ல் இவருக்கு 'பத்மஸ்ரீ' பட்டம் வழங்கிக் கௌரவித்தது பாரத அரசாங்கம். அண்மையில் இவருக்கு அறுபது ஆண்டுகள் பூர்த்தியானதையொட்டி நிகழ்ந்த விழாவில் சென்னை ரோட்டரி சங்கம் இவருக்கு ஒரு விருது வழங்கிக் கௌரவித்துள்ளது. சேவைக்கே தம் வாழ்க்கையை முழுவதும் ஈடுபடுத்திக் கொண்டு விட்ட திரு ஜகதீசன், குஷ்டரோகக்காரர்களைச் சமூகம் வெறுத்து ஒதுக்குவது கண்டு மனம் புழுங்குகிறார். ஒரு குடும்பத்தில் ஒரு பையனுக்கு க்ஷயரோகம். அவனது சகோதரனுக்குக் குஷ்டம். க்ஷயரோகம் கண்டவன் நோயினின்று மீள்வான் என்ற நம்பிக்கையில்லை. இருந்தும், ''மதனப்பள்ளிக்கு அழைத்துக் கொண்டு போயிருந்தோம். இத்தனை ஆயிரம் செலவு ''என்றெல்லாம் பெருமையோடு சொல்லிக் கொண்டனர் சிறுவனின் பெற்றோர். ஆனால் குஷ்டம் கண்ட இன்னொரு பையனிடம் அவ்வளவு சிரத்தையில்லை, பெற்றோருக்கு! இந்தப் பையனை டாக்டர் காக்ரன் சிகிச்சை செய்து நன்கு குணப்படுத்தி விட்டார். குஷ்ட நோயாளிகளிடம் குடும்பத்தினருக்கே அநுதாபமில்லையே?'' என்று வேதனையோடு கேட்கிறார் திரு ஜகதீசன்.

அருவருப்பு அன்பும் அநுதாபமுமாக மாற வேண்டும்.

பேட்டி: **பரணன்**

# குமாரி புஷ்கலா

கலைகள் எல்லாமே ஒரு வரம்புக்குள் அடங்கிப் பூரணத்துவம் அடைய வேண்டியிருக்கிறது. ஓவியம், நாட்டியம், சங்கீதம் முதலிய எல்லாக் கலைகளுக்குமே கற்பனை வரம்பு இருக்கிறது. அந்த வரம்புக்குள் தன் திறமை முழுவதையும் காட்டுவதற்குக் கலைஞருக்குக் கலையைப் பற்றிப் பூரண உணர்வு வேண்டும்.

அதிலும் நாட்டியக் கலை எல்லாக் கலைகளையும் விடக் கடினமானது. முதலில் அது பரத நாட்டியம் என்ற பிரிவில் அடங்க வேண்டும். பிறகு எந்த ஊர்ப் பாணியில் ஆசிரியர் பயின்றாரோ அந்தப் பாணிக்குள் அடங்கியே ஆக வேண்டும். அதற்கு மேல் ஆசிரியரின் உள்ளுணர்வுக்கு ஏற்பப் பயில வேண்டும். மாணவ மாணவியின் வயதுக்கும், மனோ வளர்ச்சிக்கும் ஏற்றவாறு நாட்டியம் பரிமளிக்கிறது. இதயத்தில் பூரண நிறைவு ஏற்படும்போது கலையானது தனக்கேற்பட்ட வரம்புக்குள் பிரகாசிக்கிறது.

மயிலாப்பூர் பைன் ஆர்ட்ஸ் சபையின் ஆதரவில் நடைபெற்ற குமாரி புஷ்கலாவின் நாட்டியம் பல விஷயங்களில் சிறப்பாக இருந்தது. கலையான [illegible]ற்றம், சரியான உயரம், நல்ல லய ஞானம், இசையறிவு எல்லாம் அமைந்திருக்கின்றன இவருக்கு. இவருடைய தாயார் ஸ்ரீமதி பட்டம்மாவும், அத்தையான ஸ்ரீமதி கமலா அர்ச்சுதராமன் அவர்களும் பின்பாட்டுப் பாடுவது பெரிய அதிர்ஷ்டம்.

அன்றைய நாட்டியத்தில் விசேஷமாகக் குறிப்பிட வேண்டியது பூரிகல்யாணி ராகத்தில் ஸ்ரீ தண்டபாணி பிள்ளையால் அமைக்கப்பட்ட வர்ணமாகும். தாயாரும் அத்தையும் இழைத்து இழைத்துப் பாட, குமாரி புஷ்கலா அந்த வர்ணத்தைத் திறமையுடன் ஆடிக் காட்டினார். இன்னும் கொஞ்சம் அப்பியாசம் செய்து உழைத்தால் இன்னும் சோபிக்கும். முதலில் கலாக்ஷேத்திரத்திலும், பிறகு தண்டபாணி பிள்ளையிடத்திலும் நாட்டியம் பயின்றவரான ஸ்ரீமதி மாலதி நட்டுவாங்கம் செய்தார். திறமையாக இவர் நட்டுவாங்கம் செய்த போதிலும் ஜதி சொல்லும்போது குரல் மெல்லியதாக இருப்பதால் சோபிக்கவில்லை.

குமாரி புஷ்கலாவைப் போன்ற குழந்தைகளுக்குப் பதங்கள் சொல்லிக் கொடுக்கும்போது கொஞ்சம் யோசனை செய்து சொல்லிக் கொடுக்க வேண்டும். ''வருகலாமோ''என்ற பாடல்கள் கேட்க எத்தனையோ இனிமையாக இருந்தபோதிலும் நந்தனார் வாழ்ந்த காலத்தின் சூழ்நிலையை இக்காலத்திய குழந்தைகள் முற்றிலும் புரிந்து கொள்வது அசாத்தியம் என்றே சொல்லலாம். பொருத்தமான பதங்களைத் தேர்ந்தெடுத்துச் சொல்லிக் கொடுத்தால் புஷ்கலாவின் அபிநயம் மேலும் சிறப்பாக இருக்கும்.

கலை ஞானமும் ஆர்வமும் உள்ள குடும்பத்தில் பிறந்த குமாரி புஷ்கலா எதிர் காலத்தில் இன்னும் சிறப்பாக நாட்டியம் செய்து மகிழ்விப்பார் என்று எதிர்பார்க்கிறோம்.

சபாக்களை நடத்துபவர்கள் சில முக்கிய விஷயங்களைக் கவனிக்கத் தவறிவிடுவது மிகவும் வருத்தமூட்டும் விஷயமாகும். மேடை என்பது ஒரு புனித க்ஷேத்திரம். அதை ஒரு பூஜா க்ருஹமாகப் பாவிக்க வேண்டும். நாட்டியம் செய்வதற்கு முன்னால் அரங்க பூஜை செய்ய வேண்டும். ரங்காதி தேவதைகளுக்கு ஒரு தனி ஸ்துதியும் அபிநய தர்ப்பணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் காலத்து சபைகளில் மேடையைப் பெருக்கிச் சுத்தம் செய்யாமல் வைத்திருப்பது வருந்த வேண்டிய விஷயம். அன்று குமாரி புஷ்கலா ஆட ஆரம்பித்ததும் புழுதி மண்டலம் ஒலிம்பி சினிமாவில் வருகிற கனவுலகக் காட்சியை நினைவூட்டியது. ஆடுகிறவருக்கும், பாடுகிறவர்களுக்கும் இது எவ்வளவு கஷ்டமாக இருக்கும்!

- ஆனந்தி



# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

## ராஜாஜி

### 32

குருக்ஷேத்திர யுத்தம் ஒன்று நம் உள்ளத்தில் எப்போதும் நடைபெற்று வருகிறது. வழக்கப்பட்டுப் போன தீய குணங்களோடு சண்டையிட்டுப் பாவத்துக்குத் தோல்வி கொடுத்து நன்மை வெற்றி பெறச் செய்வது மனிதனுடைய கடமை; பிறந்ததன் பயன். இது நாம் செய்ய வேண்டிய யுத்தம். இந்த யுத்தத்தில் வெற்றி பெறுவதற்கு சாஸ்திரம் நமக்கு வழிகாட்டுகிறது. இல்லாவிடில் அந்த சாஸ்திரத்தில் பயனில்லை. இந்த யுத்தத்தில் வெற்றியடைவதற்குக் குறுக்குப் பாதை கிடையாது. பயம் என்பதே பெரிய பாவம். கோழைத்தனத்தினால் ஹிம்ஸை செய்கிறோம். கொலை, அட்டகாசம் முதலிய பாவச் செயல்களை விடக் கோழைத்தனம் மக்களுக்குப் பெரிய சத்துருவாகும். தெய்வ பக்தி குறைந்தால்தான் கோழைத்தனம் உண்டாகிறது. ஆண்டவனுடைய குணங்கள் அறியாமலிருப்பதால் பயம் ஏற்படுகிறது. என்னுடைய அனுபவத்தை வைத்துச் சொல்கிறேன். உள்ளம் கரைந்து பிரார்த்தனை செய்வதே பயத்தைத் தீர்க்கும். பாவ வழக்கங்களிலிருந்து விடுபடுவோம். நமக்குள் ஆண்டவன் கோயில் கொண்டிருக்கிறான் என்ற நம்பிக்கை இருந்தாலேதான், பிரார்த்தனை செய்து வெற்றி பெற முடியும்.

ஆண்டவனுக்கும் சைத்தானுக்கும் யுத்தம் என்று கிறிஸ்தவர்களும் இஸ்லாமியர்களும் சொல்வது உள்ளத்தில் நடக்கும் இந்தக் குருக்ஷேத்திர யுத்தத்தைத்தான். பார்ஸி மதமும் இந்த யுத்தத்தைத்தான் அஹுரா மஸ்துக்கும் அரிமானுக்கும் யுத்தம் என்று சொல்வார்கள். இந்து புராணங்களில் சொல்லப்படும் யுத்தங்களும் இதுவே. அசுரர்களோடு சேருவோமா, தேவர்களோடு சேருவோமா என்பது கேள்வி. தேவர்களோடு சேருவதென்றால் அதற்கு முதல் படி பிரார்த்தனையாகும். அசுரர்களிடமிருந்து மீளவேண்டுமானால் ஆண்டவனோடு உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டும். அந்த உடன்படிக்கைக்குத்தான் பெயர் பிரார்த்தனை.

வாயினால் சொல்லும் மந்திரம் மட்டும் பிரார்த்தனையாகாது. உள்ளத்திலிருந்து பிரார்த்தனை தோன்ற வேண்டும். அப்போது ஒவ்வொரு செயலும் எண்ணமும் கூடப் பிரார்த்தனையாகும். பிரார்த்தனை செய்யும் சமயத்தில் ஒரு பாப எண்ணம் உள்ளத்தில் தோன்றினால் செய்யும் ஜபம் மோசம் என்பதை அறியலாம். மனம், வாக்கு, காயம் மூன்றும் சுத்தம் அடைந்தால் செய்யும் பிரார்த்தனை உண்மைப் பிரார்த்தனையாகும். மூன்றுவித பாபத்தின் தாக்குக்கும் உண்மையான பிரார்த்தனை ஒரு கேடயமாகும்.

இப்படி உண்மையாகப் பிரார்த்தனை செய்யும் முயற்சியில் முதல் முதலில் வெற்றி அடையாமலிருக்கலாம். நம்மோடு நாமே யுத்தம் செய்ய வேண்டியதாகும். வருஷக்கணக்காகவும் முயற்சி செய்ய வேண்டியதாகும். பொறுமையுடன் முயல வேண்டும். தோல்விக்கு மேல் தோல்வி இருளுக்கு மேல் இருளாயினும் தைரியத்துடன் பயமின்றிப் போர் புரிய வேண்டும். பிரார்த்தனை செய்பவனுக்கு யுத்த களத்திலிருந்து பின்வாங்கிப் புறங்காட்டி ஓடுவது என்பது கிடையாது.

நாம் சொல்வது ஒரு கட்டுக்கதை அல்ல; வெறும் கற்பனைச் சித்திரமல்ல. பிரார்த்தனையைக் கொண்டு எல்லா இடையூறுகளையும் தாண்டிச் சென்ற பெரியோர்களுடைய அனுபவத்தையும் என்னுடைய அனுபவத்தையும் கொண்டு சொல்கிறேன். என்னைப் பொறுத்த மட்டில் பக்தியும் பிரார்த்தனையும் ஒன்றேயாகும். ஏதோ ஒரு சம்பவத்தையாவது அல்லது சில நாட்களில் நடந்த நிகழ்ச்சியைக் கொண்டாவது நான் பேசவில்லை. நாற்பது ஆண்டுகளின் அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன்; வாழ்க்கையில் வெற்றியும் தோல்வியும் எல்லாம் கண்டிருக்கிறேன். அந்தகாரம் மூடிய நாட்களுண்டு. நிராசையாகப் போன நாட்களும் உண்டு. அதைரியப்பட்டிருக்கிறேன். பயந்திருக்கிறேன். அகங்காரத்தால் மோசமும் போயிருக்கிறேன். ஆயினும் என்னுடைய பக்தியானது கஷ்டங்களையெல்லாம் தாண்டுவதற்கு உதவியிருக்கிறது. என்னுடைய பக்தி மிகக் குறைவான பக்தி. அது இன்னும் பூரணமடையவில்லை என்பதை அறிவேன். ஆயினும் அந்தக் குறைவு பட்ட பக்தியே இதுவரையில் நான் கண்ட இடையூறுகளையெல்லாம் அகற்றவும் தாண்டவும் எனக்குச் சக்தி தந்திருக்கிறது.

ஆண்டவனோடு நாம் வியாபாரம் செய்ய முடியாது. நம்முடைய ஆணவத்தை அகற்றிவிட்டு நாம் நம்மைச் சூன்யமாகச் செய்து கொண்டால்தான் அவன் பாதங்களில் வேறு கதியில்லை என்று விழுந்தால்தான் நமக்குள் தோன்றும் தீய எண்ணங்கள் விலகும். உண்மை விமோசனத்துக்கு வழி வேறில்லை. முற்றிலும் நம்மை நாம் அவனுக்கு அர்ப்பணம் செய்துவிட்டால்தான் விமோசனம் பெறுவோம். நம்மை நாம் முற்றிலும் அர்ப்பணம் செய்துவிட்டு ஒன்றுமில்லாமல் நின்றோமானால் பிற ஜீவன்களுக்குத் தொண்டு செய்யும் தொண்டர்களாகிப் போவோம். அந்தத் தொண்டே ஆனந்தமாகி விடுகிறது. வேறு விளையாட்டும் வேடிக்கையுமே வேண்டியதில்லை. புத்துயிர் பெற்று மற்றவர்களுக்குப் பணி செய்வதிலேயே மகிழ்ச்சி கண்டு அதற்கு வேண்டிய தேக பலமும் மனோ பலமும் அடைவோம்.

(யங் இந்தியா 20-12-28)

# புது

## டீலக்ஸ் சீலிங் விசிறி

- எழிற் தோற்றமும், புது மோஸ்தரான மழுமழுப்பான உருவமும் கொண்டது.
- முற்றிலும் வார்ப்பினாலானது. இலேசானது.
- நவீன உற்பத்தி உத்திமுறைகளின்படி செய்யப்பட்டதால், தரத்தில் அபி விருத்தியுடன் தொந்திரவற்ற இயக்கமும் கொண்டது
- சுலபமாகக் சுழற்றவும் இணைக்கவும் கூடியது.

# புது

## முறையிலமைந்த ரெகுலேட்டர்




- நவீன மோஸ்தரில் செய்யப்பட்டது.
- மின் கம்பிகளை மூட மிகவும் ஏற்றவையானது.
- இருபுறமும் திருப்பக்கூடிய புது முறையிலமைந்த ரோடரி ஸ்விச் கொண்டது.
- இயங்கும்போது சூடேறுமலிருக்க சோக் காயில் யூனிட் கொண்டது.

**ஓரியண்ட் விசிறிகள்**

இரண்டு வருட உத்திரவாதம் கொண்டது

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்., கல்கத்தா-54







# குடவாயில் கோணேஸ்வரர்

சோழ வள நாட்டில் கும்பகோணத்துக்குத் தென் கிழக்கே பன்னிரண்டு கல் தூரத்திலும் திருவாரூரிலிருந்து வட மேற்கே பதின்மூன்று கல் தொலைவிலும் அமைந்திருப்பது திருக் குடவாயில் (குடவாசல்) என்னும் திருத்தலம். வடக்கிலும் தெற்கிலும் காவிரி நதியின் கிளைகளான குடமுருட்டியும், சோழ சூடாமணி ஆறும் வளைந்து நெளிந்து ஓடுகின்றன. நல்ல நன்செய், புன்செய் நிலங்கள் கொண்ட பசுமையான தோற்றம் உடையது. இத்தலையும் சூழ நகரத்தின் நடுப் பாகத்தில் முக்கி மான சாலையின் அருகே திருக்குளம் அருகில் அமைந்துள்ள திருக் கோயிலில் ஸ்ரீ பெரியநாயகி அம்மனும் ஸ்ரீ கோணேஸ்வர ஸ்வாமி யும் இதர பரிவார ஸ்வாமிகளும் எழுந்தருளியுள்ளனர்.

கும்பகோணம், கலயநல்லூர் என்கிற சாக்கோட்டை, குடவாயில் ஆகிய மூன்று க்ஷேத்திரங்களும் பிரளய காலத்துக்குப் பிறகு ஒரே காலத்தில் உதயமான க்ஷேத்திரங்கள். ஒவ்வொரு சதுர்யுக முடிவிலும் ஒரு மகாப் பிரளயம் ஏற்படுவதாகப் புரா ணங்கள் கூறுகின்றன. அந்தச் சமயத்தில் பகவான், எல்லா ஜீவ ராசிகளின் அணுக்களையும் குடத்தில் அடைத்து மிதக்க விடுவ தாகச் சொல்லப்படுகிறது. அப்படி இந்தத் திருத்தலமானது சென்ற கலியுக முடிவில் ஏற்பட்ட மகா பிரளய சமயத்தில் பகவான் ஜீவராசிகளை ஒரு குடத்தில் அடைத்து மிதக்கவிட, அந்தக் குடம் பிரளயத்துக்குப் பின்னர் பூமியைத் தொட்ட வுடன், மூன்று பாகமாக வெடித்து அதன் அடிப் பாகம், திருக்கலயநல்லூர் (சாக்கோட்டை) என்றும், மத்திய பாகம் கோண வடிவமாகக் கும்பகோணம் என்றும், குடத்தின் வாயில் பாகம் குடவாயில் என்றும் மூன்று க்ஷேத்திரங்கள் உண்டாயின.

பதினெட்டுப் படிகளைக் கொண்ட மலையின்மீது மேற்குத் திசை நோக்கி அமைந்துள்ள மாடக் கோயில் இதுவாகும். இதை யானையேறாப் பெருங்கோயில் என்றும், இதை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் கோச்செங்கட்சோழன் கருங்கல் திருப்பணி செய்ததாகவும் வரலாறு கூறுகிறது.

இத்தலம் மேற்கு நோக்கிய வாயிலை உடையதால் விசேஷ மந்திர சக்தி வாய்ந்ததெனக் கூறப்படுகிறது. இங்குள்ள விமானத்

கே.எஸ். இராமசாமி

திலுள்ள சிற்பங்கள் அழகானவை. இதர க்ஷேத்திரங்களிலில்லாத ''கருடசேவை'', ஏகபாத திருமூர்த்தி முதலிய சிற்பங்கள் மூலவர் விமானத்தில் விசேஷமாக உள்ளவை.

இந்த ஊரில் உள்ள திருக்குளம், அமிர்த கலசத்திலிருந்து அமிர்தம் தெளித்து உண்டான தடாகம் — இது அமிர்த தீர்த்தம் என்ற பெயருடன் கோயில் எதிரில் உள்ளது.

ஆதிகஜானனர் — விநாயகப் பெருமானுக்கு முதன் முதலில் யானை முகம் தோன்றியது இந்த ஸ்தலத்தில்தான் என்று புராணங்கள் கூறுகின்றன. இங்கு தனியாகத் துர்க்கை அம்மன் சந்நிதி கிடையாது. இங்கு ஸ்ரீ பெரிய நாயகியே ''ஸ்ரீ பிரஹதத் துர்க்காம்பிகை'' என்ற பெயருடன் விளங்குகிறார்.

இங்கு ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு ஸ்தல விருக்ஷம் இருந்துள்ளது. துவாபர யுகம் முதல் 'வாழை' ஸ்தல விருக்ஷமாக இருந்து வருகிறது. இங்கு இருநூறு ஆண்டுகளுக்கு மேற்பட்ட பலாமரம் ஒன்று உள்ளது. ஆறு விசேஷ சந்நிதிகளைக் கொண்டது. பதின்மூன்று விமானங்களுக்குக் கும்பாபிஷேகம் செய்ய வேண்டிய நிலையில் இக்கோயில் தற்போது உள்ளது. திருஞான சம்பந்தர், அப்பர் ஸ்வாமிகள், அருணகிரி நாதர் ஆகியோரால் பாடல் பெற்ற ஸ்தலம்.

இங்கு கடைசியாக 1921ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 28ந் தேதியில் மகா கும்பாபிஷேகம் நடந்துள்ளது. தற்போது 49 ஆண்டுகளுக்குப் பின்னர் மீண்டும் திருப்பணி நடந்து, 10-6-70 அன்று கும்பாபிஷேகம் நடக்க ஏற்பாடாகி வருகின்றது.

**திகழும் திருமாலொடுநான் முகனும்**
**புகழும் பெருமான் அடியார் புகல**
**மகிழும் பெருமான் குடவாயில் மன்னி**
**நிகழும் பெருங்கோ யில்நிலா யவனே**
**— திருஞானசம்பந்தர்**

கும்பாபிஷேகத்தை யொட்டி நிதி உதவியும் உதவிகளும் செய்ய விரும்பும் அன்பர்கள் ''நிர்வாக அதிகாரி, ஸ்ரீ கோணேஸ்வர ஸ்வாமி தேவஸ்தானம், குடவாசல் போஸ்ட், தஞ்சை மாவட்டம்'' என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.



அமெரிக்க நாட்டுப் பேராசிரியர் ஒருவர் தமிழ் நாட்டின் தொன்மையான நாதஸ்வர இசையை மிகக் குறுகிய காலத்தில் பயின்று மேடைகளிலும் விழாக்களிலும் இசை விருந்தளிக்கும் அளவுக்குத் தேர்ச்சி பெற்றிருக்கிறார்.

டாக்டர் வில்லியம் ஸ்கெல்ட்டன் என்பாரே நாதஸ்வரம் வாசிக்கும் அந்த அமெரிக்கக் கலைஞர். இவர் அமெரிக்காவில் கால்கேட் பல்கலைக் கழகத்தின் இசைத் துறைத் தலைவர். நீண்ட காலமாகவே இந்திய இசையில் இவருக்குப் பேரார்வம் உண்டு.

சைதாப்பேட்டை எம். நடராஜனிடம் நாதஸ்வரம் பயின்றார். கடந்த பல வாரங்களாகவே நடராஜன் குழுவினரோடு சேர்ந்து ஆலய நிகழ்ச்சிகளிலும், பிற விழாக்களிலும் நாதஸ்வர இசை விருந்தளித்து வருகிறார்.

பேராசிரியர் ஸ்கெல்ட்டன் நாதஸ்வர இசை பயில்வதுடன் நின்றுவிடவில்லை; பழைமையான இவ்விசையின் பல்வேறு இயல்புகள் பற்றி ஆராய்ச்சியும் நடத்தி வருகிறார். ஒரு நாளில் குறிப்பிட்ட சில வேளைகளில் மட்டும் ஏன் இதை வாசிக்கவேண்டும்? விழாக்களில் இது இடம் பெறுவதன் பொருள் என்ன?' என்றெல்லாம் ஆராய்ந்தறிந்து வருகிறார்.

1958ல் சித்தார் இசைக் கலைஞர் ரவிசங்கர் இவரது கால்கேட் பல்கலைக் கழகத்துக்குச் சென்றபோது இவருக்கு இந்திய இசையில் ஆர்வம் பிறந்தது. பேராசிரியர் இந்தியா வருவது இது நான்காவது தடவையாகும். சில நாட்களில் அவர் அமெரிக்கா திரும்புகிறார். முதல் தடவை வந்த போது அவர் இங்கு ஓராண்டு தங்கி வீணையும் வாய்ப்பாட்டும் கற்றார். 1966, 1967 ஆகிய ஆண்டுகளில் இரு தடவை வந்தார்.

பேராசிரியரின் மனைவியும் இந்திய இசைகளில் ஆர்வமுள்ளவர். அவர் புல்லாங்குழல் வாசிப்பார். யோகப் பயிற்சி பெற்றவர். ஆலயங்களில் பொங்கல் போன்ற பிரசாதங்கள் எப்படித் தயாரிக்கிறார்கள் என்றறிந்து சமைக்கப் பழகியுள்ளார். மகள் லிண்டா வீணை பயின்றிருக்கிறாள். பதினொரு வயது மகன் ஒருவன் சென்னையில் படித்தான். மூத்த மகன் புருஸ் மிருதங்கம் வாசிப்பார்.

நாதஸ்வர ஆசிரியரும் அவரது அமெரிக்க மாணவரும் ஒருவர் மற்றவரிடம் வைத்துள்ள மதிப்பும் அன்பும் ஈடு இணையற்றவை; இவ்வளவுக்கும் ஒருவர் மற்றவரது மொழியில் அறிந்தவை ஒருசில சொற்கள்தாம். ஆசிரியருக்குத் தமது மாணவரைப் பற்றி மிகுந்த பெருமை. நாதஸ்வர இசையின் சிறப்புக்களையும் நுட்பங்களையும் கண்ணும் கருத்துமாக அவர் ஆர்வத்துடன் கற்பதை ஆசிரியர் பெரிதும் பாராட்டுகிறார்.



# பொக்காரோ படும் பாடு

பேராசிரியர்: சி.எஸ்.மகாதேவன்.

பொக்காரோ உருக்காலையின் ஆரம்பக் கட்ட வேலைகள் நடக்கின்றன.

இன்று நம் நாட்டில் சர்க்கார் துறையின் ஆதரவுடன் உருவாகிக் கொண்டிருக்கும் பொக்காரோ எஃகு ஆலையின் நிலைமை மிகவும் பரிதாபகரமானது. பாரதப் பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் டில்லி மக்கள் சபையில் பேசுகையில், 'பொக்காரோ திட்டத்துக்கான செலவு நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே வருகிறது' என்று கூறியுள்ளார். இதன் காரணம் ஒன்றன்று; ரூபாய் நோட்டின் மதிப்புக் குறைப்பு சிமெண்ட், மற்றும் பல மூலப் பொருட்களின் மிகுதியான விலை இவையெல்லாம் சேர்ந்ததன் கூட்டு விளைவேயாகும். பிரதமருக்கு விருப்பமான அரசினர் துறையின் ஆதரவில் உருவாகிக் கொண்டிருக்கும் இவ்வாலையின் தற்போதைய நிலைமை நோக்குகையில் நாம் வியப்பும் வருத்தமும் அடைகிறோம்.

பொக்காரோ ஆலையின் வரலாற்றை நாம் ஊன்றிக் கவனிக்கும்போது சில செயல்கள் சரியான முறையில் நடைபெறவில்லை என்பது தெரிய வருகிறது. இவ்வாலைத் திட்டத்தை அறுநூறு கோடி ரூபாய் செலவில் முடித்து விடலாம் என்று சில ஆண்டுகளுக்கு முன் அமெரிக்கர்கள் நம்பிக்கை தெரிவித்தனர். ஆனால் நம் அரசாங்கம் அமெரிக்காவுடன் இத்திட்டத்துக்கான ஒப்பந்தம் செய்து கொள்ளவில்லை. அதற்கு மாறாக ருஷ்யாவுடன் அதிகமாகத் தொடர்பு கொள்ளவேண்டும் என்பதற்காகவும், நம் அரசாங்கத்துக்கு கம்யூனிஸத்தில் நம்பிக்கை அதிகம் என்பதை உலகுக்குத் தெரிவிப்பதற்காகவும் ருஷ்யக் கூட்டுறவுடன் இத்திட்டத்தை உருவாக்கியது. சுருங்கச் சொல்லின் பொக்காரோ திட்டம் அரசியல் அடிப்படையில் உருவாக்கப்பட்டது. இவ்வரசியல் அடிப்படை நம் நாட்டின் பொருளாதாரத்துக்கு நன்மை தருவதா என நாம் சிந்திக்க வேண்டியுள்ளது.

ருஷ்யர்கள் நம்முடன் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தப்படி, அவர்கள் இத்திட்டத்தை முடித்திருக்க வேண்டும். ஆனால் அவர்கள் அதைக் குறிப்பிட்ட கால அளவிலோ அன்றிக் குறைந்த செலவிலோ முடிக்கவில்லை. தற்பொழுது பொக்காரோவுக்கான செலவுகள் போய்க் கொண்டிருக்கும் போக்கைக் கண்டால், அதன் முதற் பிரிவுக்கான செலவினங்களே ரூபாய் எண்ணூறு கோடியை எட்டிவிடும் என்று எண்ணத் தோன்றுகிறது. இதற்கு முக்கியமான காரணம் ருஷ்யர்களின் ஊது உலைத் தொழில் நுணுக்கங்கள் **(Blast Furnace Technology)** அமெரிக்காவினுடையதைப் போன்று சிறப்பாக இல்லாததே எனக் கூறப்படுகிறது. இதே கருத்தைத்தான் இங்கிலாந்தில் வெளிவந்த 'பிரிட்டிஷ் ஸ்டீல் கார்ப்பரேஷன் பிரஸ் ரெவியூ'வும் **(British Steel Corporation Press Review)** வலியுறுத்தி உள்ளது.

'இவ்வளவு பெரியதோர் எஃகு ஆலை நம் நாட்டுக்குத் தற்சமயம் தேவையில்லை' என்று சில ஆண்டுகளுக்கு முன் நம் பொருளாதார நிபுணர்கள் கருதினர். அதே சமயத்தில் திரு ம. பொ. சி. தலைமையில் அமைக்கப்பட்ட 'சர்வ கட்சி சேலம் உருக்காலைக் குழு' ஒரு புதிய கருத்தை வெளியிட்டது. 'பொக்காரோவின் உற்பத்தியை ஒரு மில்லியன் டன்களாகக் குறைத்துக் கொண்டு சேலம் உருக்காலை மட்டுமன்று, ஹாஸ்பெட்டிலும், விசாகப் பட்டினத்திலுமாக மொத்தம் மூன்று சிறு உருக்காலை ஏற்படுத்தலாம்' என்று அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர்களின் இக் கணக்குப்படி பொக்காரோவின் உற்பத்தித் திறனைக் குறைப்பதால் ரூபாய் முந்நூறு கோடி மிஞ்சும். பொக்காரோவுக்கான போக்குவரத்துச் செலவில் ரூபாய் நாற்பது கோடி மீதமும் என ஆக மொத்தம் நானூற்றைம்பது கோடி ரூபாய் சேலம், ஹாஸ்பெட், விசாகப்பட்டினம் ஆலைகளுக்குத் தேவையான மூலதனமாகக் கிடைக்கும்.

பொருளாதாரத்துக்கும் அரசியலுக்கும் இடையே உள்ள தொடர்பு மிகுதி. அவை ஒன்றுக்கொன்று முரணாக இருத்தல் கூடாது. நம் பிரதமர் அரசியலுக்காக வேண்டிப் பொருளாதார முறைகளைக் கையாளுகிறார். இது நம் நாட்டின் வளர்ச்சியைப் பேரளவில் பாதிக்கும் என்பது திண்ணம்.

# ராமாயணம்

## ராஜாஜி

ஜடாயுவின் சொல்லைக் கேட்டதும் ராமன் கண்களினின்றும் ஆறுபோல் கண்ணீர் பெருகிற்று. வில்லை வீசி எறிந்து விட்டு, பறவையைக் கட்டி அணைத்துக் கொண்டான். ராஜகுமாரர்களுடைய துக்கம் எல்லை கடந்து போயிற்று. 'கோ'வென்று அழுது கொண்டு பூமியில் புரண்டார்கள்.

''லக்ஷ்மணா! என்னைப் போன்ற துர்ப்பாக்கியசாலி எவனுமில்லை. நாட்டை இழந்து காட்டுக்கு வந்து இங்கே சீதையையும் இழந்தேன். தசரதனுக்குப் பதில் நமக்குத் தந்தையாக இருந்த இந்த ஜடாயுவையும் நான் கொன்றேன். எனக்காகத் தன் உயிரை விட்டான். சீதையை இழந்த துக்கத்தை விட இது அதிகத் துக்கமாயிருக்கிறது. நான் நெருப்பில் விழுந்தாலும் என்னுடைய துர்ப்பாக்கியம் அந்த நெருப்பையும் அணைத்துவிடும். கடலில் விழுந்தேனானால் கடலில் உள்ள நீரும் என்னுடைய துர்ப்பாக்கியத்தால் வற்றிப் போகும். நான் பெரும் பாவி. லக்ஷ்மணா! ஒரு நாள் உன்னையும் நான் இழந்து விடுவேனோ?'' என்று ராமன் அழுது புரண்டான்.

ஜடாயுவைக் கட்டி அணைத்துக் கொண்டு, ''என் அப்பனே, என் சீதையை நீ கண்டாயா?'' என்றான். ஜடாயு பேச்சிழந்து தரையில் உணர்வற்று விழுந்தான்.

மரணத் தறுவாயிலிருந்த கழுகரசன் சரியாகப் பேசச் சக்தியின்றி மறுபடியும் தீனஸ்வரத்தில், ''பயப்படாதே, ராமா! சீதையை நீ மீண்டும் அடைவாய். அவளுக்கு ஒரு சேதமும் ஏற்படாது. இழந்த செல்வத்தை மறுபடியும் பெற்றுப் பெருமகிழ்ச்சியை அடைவாய்!'' என்று சொல்லிவிட்டு வாயில் ரத்தமும் மாமிசமும் கக்கி உயிர் நீத்தான்.

மோகத்தாலும் மயக்கத்தாலும் தாம் செய்ய வேண்டியதைச் சமயத்தில் செய்யாமலும் செய்யக் கூடாததைச் செய்தும் சீதையை இழந்தார்கள்.

அயோத்தியில் தந்தை இறந்தான். அவனுக்கு உத்தரக்கிரியைகள் பரதனும் சத்ருக்னனும் செய்தார்கள். ராமனும் லக்ஷ்மணனும் அந்த ஆறுதலைக் கூட அடையச் சந்தர்ப்பம் இல்லாமல் வனத்திலிருந்தார்கள்.

தாங்கள் அஜாக்கிரதையாக இருந்ததால் சீதைக்கு உண்டான அபாயத்தினின்று அவளைத் தப்புவிக்க, ஆயுதபாணியாயிருந்த அரக்கனோடு சிறகுகளும் காலும் மூக்கும் தவிர, வேறு ஆயுதமின்றி ஜடாயு கடும் போர் செய்து தன் உயிரைத் தத்தம் செய்துவிட்டதைக் கண்டார்கள். ராஜகுமாரர்கள் இருவரும் இந்த ஜடாயு தங்கள் தந்தைக்குச் சமானம் என்று பாவித்து அந்தப் பறவைக்குத் தகப்பனுக்குச் செய்வது போல் உத்தரக்கிரியை செய்து ஒரளவு ஆறுதல் அடைந்தார்கள். இறந்த வீரனுக்கு வேறு என்ன அவர்கள் செய்ய முடியும்?

பாகவத பக்தர்கள் ஜடாயுவை மிகப் பெரிய பக்த சிரேஷ்டனாக வணங்குகிறார்கள். அந்த ஏழைப் பறவை ராக்ஷசேந்திரனுடன் சண்டையிட்டுக் கஷ்டப்படும் போது பார்த்துக் கொண்டிருந்த சீதையின் உள்ளத்தில், எவ்வாறு அன்பும் நன்றியும் துக்கமும் பொங்கியிருக்கும் என்பதை நம் கற்பனா சக்தியைக் கொண்டு உணர வேண்டும். உணர்ந்தால் பிராட்டியின் அருளால் தூய்மையும் பக்தியும் அடைவோம். பக்தர்கள் ஜடாயுவை ஓர் ஆழ்வாராகக் கருதிப் பக்தி செய்வதில் என்ன வியப்பு? பின்னால் ராமன் இலங்கையில் யுத்தம் செய்து வெற்றி அடையப் போகிறான். ஆனால் அதைச் சீதை நேரில் காணப் போவதில்லை; அசோக வனத்தில் சிறைப்பட்டுக் கிடக்கிறாள். போர்க்கள நிகழ்ச்சியையும் புருஷனுடைய புகழையும் பிறர் சொல்லித் தான் அறிந்து திருப்தி அடையப் போகிறாள். ஆனால் ஜடாயுவின் பக்தியையும் வீரத்தையும் தண்டகாரண்யத்தில் பிராட்டி தன் கண்ணாலேயே பார்த்தாள். வில்லும் வாளும் கொண்ட அரக்கனை ஆயுதமொன்றும் இல்லாமல் எதிர்த்து, அவன் கர்வத்தை அடக்கி, முடிவில் தன் உயிரைத் தத்தம் செய்த வீரன் ஜடாயு. இலங்கையில் நடந்த யுத்தத்தைக் காட்டிலும் ராவண ஜடாயு யுத்தமே மேலானது என்று கூடச் சொல்லலாம். இதனாலேதான்

பக்தர்கள் பரதனை ஆழ்வான் என்று துதிப்பது போல், ஜடாயுவையும் ஆழ்வான் என்று பெயர் சூட்டிக் கொண்டாடுகிறார்கள்.

* * *

"லக்ஷ்மணா! உலர்ந்த கட்டைகளைத் திரட்டி அடுக்குவாய். நான் நெருப்புக் கடைகிறேன். நமக்காக உயிர் விட்ட கழுகரசனுக்கு, தசரதனுக்குச் செய்யத் தப்பிப் போன கிரியைகளைச் செய்வோம்" என்றான் ராமன்.

"வேள்வித் தீயில் ஆகுதி விட்டு யாகம் செய்த சிலர்களுக்கு எந்தப் பதவி உரியதோ, தவம் செய்யும் வானப் பிரஸ்தர்களுக்கு எந்தக் கதி உரியதோ, பூமி தானம் செய்யும் புண்ணியவான்களுக்கு எந்தப் புண்ணிய லோகம் உரியதோ, யுத்தத்தில் பின்வாங்காத வீரனுக்கு எந்த உலகம் உரியதோ, அவையெல்லாம் உனதாகுக. கழுகரசனே!" என்று சொல்லி ராஜகுமாரர்கள் நீர்க் கடனும் செலுத்தினார்கள். அதன் மேல் ராமன் மனத் தளர்ச்சி நீங்கித் தைரியம் அடைந்தான்.

* * *

பாரத மக்களுக்கு, கோடிக்கணக்கான ஆண் பெண் குழந்தைகளுக்கு, ராமாயணம் வெறும் கதையல்ல. வாழ்க்கை நிகழ்ச்சிகளைவிட உண்மை. சூரியனுடைய வெயிலினால் செடியும் கொடியும் எப்படி உண்மையில் வளர்கின்றனவோ, அப்படியே இந்த ராம சரித்திரத்தில் காணும் நிகழ்ச்சிகளை உட்கொண்டு பாரத தேசத்துக் கோடிக் கணக்கான மக்கள் வளர்ந்து பண்பட்டு வாழ்க்கை நடத்தும் சக்தியை அடைந்து வருகிறார்கள். எந்த அபலையாவது அபாயத்திலோ கஷ்டத்திலோ வருந்துவதைப் பார்த்தோமானால் ஜடாயுவை நினைத்து நாம் மனோபலம் அடைந்து செய்ய வேண்டியதைச் செய்வோமாக!

* * *

அவதார புருஷனான ராமன் துக்கம் வந்த போது மனம் தளர்ந்து புலம்புவது, உலகத்தில் மற்றொரு குலத்தார் பூஜிக்கும் அவதார புருஷனான ஏசுநாதரைப் பற்றிக் கிறிஸ்து புராணத்தில் சொல்லியிருப்பதோடு ஒப்பிட்டுக் கவனிக்கத்தக்கது. சிலுவையில் தூக்கி ஆணிகள் அடித்து மாட்டப்பட்டு வெகு நேரம் அந்த நிலையில் தவித்து முடிவில் உயிர் போகும் தறுவாயில், "ஏலோய்! ஏலோய்! லாமா சபக்தானி!" இபராணி பாஷை, இதன் பொருள்: "என் கடவுளே! என் கடவுளே! என்னை ஏன் கைவிட்டாய்?" என்று ஏசுநாதர் உரத்த குரலில் புலம்பிக் கூவி உயிர் நீத்ததாக எழுதப் பட்டிருக்கிறது. அவதாரங்களில் இன்றியமையாத ஒரு பொது இலக்கணத்தை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். தான் தெய்வமேயானாலும் அவதார உடலினுடைய தருமத்தின்படி துக்கப்படுதலும் மற்றும் பலவும் நடக்கும்.

## 54. இடது கண் துடித்தது

எதிர்பாராத கஷ்டங்களும் விபத்துக்களும் ஒன்றன்பின் ஒன்றாக வந்ததைக் கண்டு, விதியின் போக்கை யாராலும் விலக்கமுடியாது என்கிற உணர்ச்சி மனத்தைக் கவர்ந்து ராம லக்ஷ்மணர்கள் தங்களுக்குள்ள இயற்கைத் தைரியத்தை அவ்வப்போது இழந்தார்கள். ஆனபோதிலும் ஒருவரை ஒருவர் தேற்றிக் கொண்டு சென்றார்கள்.

காட்டில் போய்க் கொண்டிருந்த பொழுது எதிர்பாராதபடி ஒரு கோர உருவம் கொண்ட ராக்ஷசனுடைய கையில் இரு ராஜகுமாரர்களும் அகப்பட்டுக் கொண்டார்கள். அந்த ராக்ஷசனுக்குத் தலையுமில்லை, கால்களுமில்லை. பெரிய வயிறும், மிக நீண்ட இரண்டு கைகளுமே அவன் உருவம். காட்டில் ஓர் இடத்தில் அசையாமலிருந்து கொண்டு இரண்டு கைகளையும் நீட்டி அவற்றுள் அகப்படும் புலி, கரடி முதலிய மிருகங்களை வயிற்றுக்குள் போட்டுக் கொண்டு தின்று விடுவான். வயிற்றிலேயே அவனுக்கு ஒரு பெரிய வாய். மார்பிலே ஒரு கண். பார்த்தாலும் சகிக்க முடியாத இந்தக் கோர உருவத்தோடு இருந்த அரக்கன் கையில் அகப்பட்ட இராஜ குமாரர்கள் கொஞ்ச நேரம் திகைத்தார்கள். இன்னது செய்வது என்று தெரியவில்லை. பிறகு ராமன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்: "நீ ஒரு கையை வெட்டித் தள்ளு. நான் ஒரு கையை வெட்டிவிடுகிறேன்."

அப்படியே செய்தார்கள். அந்த அரக்கன் பெயர் கபந்தன். கைகளை வெட்டியவுடன் ஒன்றும் செய்ய முடியாமல் அரக்கன் பேச ஆரம்பித்தான். "நான் செய்த துராக்கிரமத்தால் சாபம் பெற்று இந்த உருவத்தில் வாழ்ந்து வந்தேன். நீங்கள் ராமலக்ஷ்மணர்கள் என்று எண்ணுகிறேன். நீங்கள் வந்து என் கைகளை வெட்டிவிட்டு என் உடலைத் தகனம் செய்தீர்களாகில் நான் என் சொந்த உருவம் பெறுவேன். இதுவே எனக்கு இந்திரன் சொன்ன சாப விமோசனம்" என்றான். (தொடரும்)

# காணக் கிடைக்காத தங்கம்

## ஜெகசிற்பியன்

### அத்தியாயம் ஒன்பது

நேரம் நகர்ந்தது. கையிலிருந்த புத்தகம் அவனையறியாமலே அவனது மார்பில் சாய்ந்தது. அலமாரியின் மீது மெல்லச் சாய்ந்து கொண்டான். அருமையான கனவு!... போதை மயமான நீண்ட கனவு!......

விடியற்காலை நாலரை மணிக்கு வழக்கம்போல் முத்தம்மா தன் தம்பி அருணகிரி அலமாரியின் இடுக்கில் உட்கார்ந்து கொண்டே தூங்குவதையும் பக்கத்தில் அரிக்கேன் விளக்கு எரிந்து கொண்டிருப்பதையும் கண்டு பதற்றமடைந்தாள். அவனைத் தட்டி எழுப்பி, ''என்னடா இது படிப்பு? இப்படித் தூங்கினால் உடம்பு என்னத்துக்கு ஆகும்? விளக்கையும் அணைக்காமல் விட்டு விட்டிருக்கிறாயே! தூக்கக் கலக்கத்தில் விளக்கு மேல் கையோ காலோ பட்டுக் கவிழ்ந்து போச்சுன்னா?'' என்று கோபமாகக் கடிந்து கொண்டாள்.

திடுக்குற்றுக் கண் விழித்த அருணகிரி, தன் மனக் குறளியின் விபரீதப் போக்கினால் மதியீனமாகத் தான் நடந்து கொண்டு விட்டதை எண்ணி உள்ளூறப் பயந்து போனான். அதற்கு மேல் அவனுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. சும்மா அப்படியும் இப்படியுமாகப் படுக்கையில் புரண்டு கொண்டிருந்து விட்டு, தன் அக்கா வேலைக்குப் புறப்பட்டுப் போனதும் அவன் எழுந்து கொண்டான்.

இரவெல்லாம் அடித்துப் போட்டாற் போல் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த ரத்தினவேலுவும் சாவதானமாக ஏழரை மணிக்கு எழுந்து வேலைக்குப் போக ஆயத்தமானார்.

எப்போதும் அவர் அருணகிரியிடம் எதிர் நின்று எதுவும் பேசுவது கிடையாது. அப்படிப் பேச வேண்டிய அவசியம் ஏதாவது ஏற்பட்டாலும் அதைத் தாமே நேரில் சொல்லவோ கேட்கவோ செய்யாமல், தம் மனைவியிடம் சொல்வார்; அல்லது பிள்ளைகளிடம் சொல்லிக் கேட்கச் செய்வார். தம்மிடமுள்ள பலவீனங்களையும் குறைபாடுகளையும் அவன் நன்கு அறிவான் என்பதனாலேயே



அத்தகையதொரு தாழ்வு மனப்பான்மையுடன் அவர் நடந்து கொண்டார்.

இப்படிப்பட்டவர் இன்று வேலைக்குப் புறப்படுவதற்கு முன் அவனைப் பார்த்து, ''ஏம்பா தம்பி! என்ன, அந்த ஆள் உன்னைப் பற்றி ஏதேதோ சொல்ருன்?'' என்று மொட்டையாகக் கேட்டார்.

ரசம் உதிர்ந்த கண்ணுடியில் மங்கலாகத் தெரிந்த தன் முகத்தைப் பார்த்தபடி தலைவாரிக் கொண்டு நின்ற அருணகிரி இதைக் கேட்டுத் திடுக்குற்றவனய்த் திரும்பி, ''யாரு அத்தான்?'' என்ருன் தணிந்த குரலில்.

''உன் கடை முதலாளி ஏழுமலை.''

''என்ன சொன்ஞர்?''

''நீ இப்ப முன்னே மாதிரி வேலையிலே கவனமாய் இருக்கிறதில்லையாம்!''

''இருக்கிறேனே!''

''இல்லேன்னு சொல்ருன்.''

''எப்போ?''

''நேத்திக்கு.''

''எங்கே அவரைப் பார்த்தீங்க அத்தான்?''

''கடையிலே...''

''சைக்கிள் கடையில் இருந்துக்கிட்டு அப்பாரச் சொல்லி யிருக்க மாட்டார்.



வேறே எந்தக் கடையிலாவது இருந்தப்ப சொல்லியிருந்தால் அதை நம்பாதிங்க!''

பின்ளையாண்டான், ஏழுமலையோடு தம்மையும் சேர்த்து 'அடிவெட்டு' வெட்டுகிறுன் என்பதைப் புரிந்து கொண்ட ரத்தினவேலுவின் முகத்தில் அசடு வழிந்தது. மெல்லச் சிரித்துக் கொண்டே, ''என்னமோப்பா! அவன் அப்படித்தான் சொன்னுன். ரெண்டுநாளா சாயந்தரம் ஆறு மணிக்கெல்லாம் கடையை விட்டு ஓடிப் போறயாம். வேலை நேரத்திலே எதனுச்சும் சொன்ஞல் முறைக்கிறயாம். வருத்தப் பட்டுக்கிறுன்'' என்ருர். மீண்டும் அவர் தொடர்ந்து. ''இன்னும் கொஞ்ச நாளைக்காவது குறியா யிருந்து வேலையைக் கத்துக்கப்பா! அப்புறம் நானே உனக்கு ஒரு சைக்கிள் ரிப்பேர்க் கடை போட்டுக் கொடுத்துடறேன்'' என்று ரொம்ப அமர்த்தலாகச் சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

அருணகிரிக்குச் சிரிப்பு வந்தது. அடக்கிக் கொண்டான். தம் மனைவியின் மானத்தை மறைக்க ஒரு புடவை எடுத்துக் கொடுக்கவோ, தமது பிள்ளைகளுக்குப் பசி இல்லாமல் மூன்று வேளை சோறு போடவோ, தாம் குடியிருக்கும் வீட்டு வாடகையை ஒழுங்காகத் தரவோ வக்கில்லாமல் — சம்பாதிக்கும் பணத்தையெல்லாம் குடித்துத் தீர்த்துவிட்டு — நித்திய தரித்திரராய் நாளைக் கடத்தி வரும் ரத்தினவேலுவின் அந்த டம்பமான பேச்சைக் கேட்டால் யாருக்குத்தான் சிரிப்பு வராது? அவர் எப்போதும் அப்படித்தான், ஜேபியில் பைசா இல்லா விட்டாலும் வாய்ப் பேச்சில் நூறு, ஆயிரம் என்றே அடிபடும்! விஷயம் தெரியாதவர்கள் 'ஆள் ரொம்பப் பசையானவராக்கும்' என்று எண்ணிக் கொள்வார்கள்.

அருணகிரி வேலைக்குப் புறப்பட்டான்.

ஏழுமலையின் கெடுபிடி இன்று உச்சக் கட்டத்துக்குப் போகும் என்று எதிர்பார்த்த அருணகிரி ஏமாற்றம் மட்டுமின்றி வியப்புமே அடைய வேண்டியவனுனுன். காரணம் வழக்கத்துக்கு மாருக வெகு சுமுகமாய் நடந்து கொண்டான் ஏழுமலை. 'சரக்கு' வாங்கவோ, பீடி வாங்கவோ, டீ வாங்கவோ கூட இவனை அவன் இன்று ஏவவில்லை. வேலையில் எவ்விதக் குற்றங் குறைகளும் கண்டு பிடித்துத் திட்டவோ, அடிக்கவோ, முணுமுணுக்கவோ இல்லை. 'ஏம்பா கண்ணு'! ஏண்டா ராஜா!' என்று பேச்சுக்குப் பேச்சு அன்பொழுக அழைத்தான். ஒரு முறை கூடத் தன் வழக்கமான கட்டைக் குரலில், 'டேய், சோங்கு' என்று அந்த அசிங்கமான பட்டப் பெயரிட்டுக் கூப்பிடவில்லை. ஆனல் இவையெல்லாவற்றுக்கும் வட்டியும் முதலுமாய்ச் சேர்த்துத் தன் கோபத்

தையும் வெறுப்பையும் வேறொரு விஷயத்தில் பச்சையாக வெளிக்காட்டினான்.

ஆமாம்; வழக்கம் போல் அன்று மதியம் ஏழுமலை தனக்கு வந்த சாப்பாட்டில் அருணகிரிக்கு என்று கொஞ்சமும் ஒதுக்கி வைக்கவில்லை. முழுவதையும் அவனே சாப்பிட்டுப் பெரிய ஏப்பமாக விட்டுக் கொண்டு எழுந்துவிட்டான். அதுமட்டுமல்ல; இதற்கு முன்னெல்லாம் தான் சாப்பிட்டு மீதப்படாமல் போனால் அவனை ஹோட்டலுக்கு அனுப்பி ஏதேனும் பலகாரம் வாங்கிச் சாப்பிடக் காசு கொடுப்பான் அல்லவா? இன்று அப்படியும் கொடுக்கவில்லை.

வேலை செய்யும் நேரத்தில் அருணகிரி கஜூர் காட்டியது போல, காசு கொடுப்பதில் கணக்குப் பார்த்து விட்டான் ஏழுமலை; நியாயம்தானே?

'படவா ராஸ்கல்! நேத்திக்கு என் கிட்ட சட்டமா பேசினே, சட்டம்? அதுக்குத்தான் இப்ப உன்னை வயித்திலே அடிச்சிருக்கிறேன்! வயிறு காஞ்சாத்தான் உனக்குப் புத்தி வரும்!' என்று உள்ளூறக் கறுவுவது போல் அருணகிரியை ஓரக் கண்ணால் பார்த்தபடி வெகு அமர்த்தலாக வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டிருந்தான் அவன்.

கடைக்கு வெளியே 'மங்கி - டாப்' நிழலில் குந்துக் காலிட்டுப் பரிதாபமாக உட்கார்ந்திருந்தான் அருணகிரி. தன் முதலாளியிடம் காசு கேட்கவும் பயம். கையிலோ ஒரு பைசாவும் இல்லை. காலையில் கொஞ்சம் பழையமுது சாப்பிட்டு விட்டு வந்ததுதான். வேலையும் இன்றைக்கு அதிகம். அதனால் நேரமாக ஆகப் பசி வயிற்றைப் பிசைந்து முறுக்கியது. அத்துடன் நேற்றிரவு சரியாகத் தூங்காததால் களைப்பும் சோர்வும் மிகுதியாயின.

இப்போது மணி ஒன்றரைதான். இன்னும் அரை மணி நேரம் அவன் ஓய்வு எடுக்கலாம். எங்காவது சற்று நேரம் படுத்து எழுந்தால் நன்றாயிருக்கும் போல் தோன்றியது. எங்கே படுப்பது?

அந்தச் சாலையின் மேலண்டைப் பக்கம் சிவாஜி சர்க்கிள் பஸ் நிலையத்துக்கு அருகில் ஓர் உயர்நிலைப் பள்ளி இருந்தது. சிவப்பு வர்ணம் பூசப்பட்ட பெரிய கட்டிடம் அது. சுற்றிலும் குட்டையான மதில் சுவர்கள். உள்ளே நிழல் தரும் மரங்கள் நிறைய இருந்தன.

பள்ளியின் முகப்பு வாயில் புறமிருந்த மதில் சுவரின் மேல் மதியப் போதில் மாணவர்களும், ஆங்காங்கே சிறு சிறு பட்டறைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களும் ஏறி உட்கார்ந்து சாலையில் போவோர், வருவோரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பார்கள். சிலர் அகலமான அந்த மதிள் சுவரின் மேல் படுத்து ஒரு குட்டித் தூக்கமும் போடுவார்கள். இரண்டு மணியானதும் சுவர் காலியாகி விடும். அப்புறம் வேலை வெட்டி இல்லாத சில சோம்பேறி

## பிறந்த நாள்



"பிறந்த நாள் விழா எனக்கு ஏன் கொண்டாட வேண்டும் என்று கேட்கிறார்கள். எனக்கு வயது 53 ஆகிறதே! அந்த ஒரு காரணமே போதாதோ?"



"வண்ணப் புகைப்படம் ஒன்று எடுத்துக் சுவரொட்டி அச்சடிக்க ஏற்ற முகவெட்டு இல்லையா எனக்கு?"



"கடந்த முப்பத்து மூன்று வருஷங்களாக என் மனைவியின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வரவில்லையா நான்?"

களையும் பிச்சைக்காரர்களையுமே அங்கு பார்க்கலாம்.

பசிக் களைப்பும் தூக்கச் சோர்வுமாக வேதனைப்பட்டுக்கொண்டிருந்த அருணகிரி எழுந்து அந்த மதில் சுவரை நோக்கி வந்தான். சுவரின் மேல் ஆட்கள் இல்லாத இடமாகப் பார்த்து ஒரு பதினைந்து நிமிட நேரம் கண்ணை மூடி எழுந்திருக்கலாம் என்ற முடிவுடன், கிழக்கு மூலைச் சுவர் பக்கம் ஏறி உட்கார்ந்த அவனுடைய பார்வை யதேச்சையாக உட்புறமிருந்த ஒரு மரத் தடியை நோக்கிச் சென்றது.

அங்கே அந்தச் சோற்றுக் கூடைக்காரப் பெண் உட்கார்ந்திருந்தாள். அவள் எதிரில் ஐந்தாறு ஆடவர்கள் குத்துக் காலிட்டுக் குந்தி யிருந்தனர். அவர்கள் எல்லாம் ரஸ்ஸல் மார்க்கெட்டில் சுமைக் கூலிகளாக இருப்பவர்கள். அந்தப் பெண் தன் கூடையிலிருந்த ஒவ்வொரு கேரியரையும் திறந்து அதில் மிச்சம் மீதிப்பட்ட சோறு, கறி, சாம்பார், ரசம் எல்லாவற்றையும் ஒரு பெரிய தூக்குப் பாத்திரத்தில் வழித்துப் போட்டு மொத்தமாகக் கூட்டிப் பிசைந்தாள். பிறகு மற்றொரு சிறிய கிண்ணத்தில் அளவாக அள்ளி நிறைத்து, கூலிகள் தம் இடது கையில் ஏந்திக் கொண்டிருந்த மந்தார இலைகளில் கவிழ்த்துக் கொண்டிருந்தாள்.

அவ்விநோதமான உணவுக் கலவையை ஆவலுடன் புசித்துக் கொண்டிருந்தனர் கூலிகள். ஒரு கிண்ணம் சோற்றுக்கு நாலணா என்ற கணக்கில் காசு வாங்கித் தன் சுருக்குப் பையில் போட்டுக்கொண்டாள் அவள்.

இவ்வளவையும் வியப்புடன் பார்த்தவாறு மதில் சுவரின் மேல் உட்கார்ந்திருந்தான் அருணகிரி. அவன் அங்கு வந்ததை அவள் இன்னமும் கவனிக்கவில்லை என்றே தோன்றியது. காலியான பாத்திரங்களை யெல்லாம் ஒரு கூஜாவிலிருந்த தண்ணீரைக் கொண்டு சிக்கனமாகக் கழுவிக் கூடையில் வைக்கத் தொடங்கினாள்.

ஏதோ ஒரு தொழிற்சாலையிலோ, அல்லது காரியாலயத்திலோ வேலை பார்ப்பவர்களுக்கு அவரவர் வீடுகளிலிருந்து தினமும் சோறு எடுத்துப் போய்க் கொடுக்கும் அவள் திரும்பி வரும்போது பாத்திரங்களில் மிச்சப்பட்டிருக்கும் உணவை இங்கே கொண்டு வந்து ஏழைக் கூலிகளுக்கு விற்பது வழக்கம் போலும்!

சாப்பிட்டு முடித்த கூலிகள் ஒவ்வொருவராக எழுந்து சென்றனர். எல்லோரும் போன பின் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன் போல் சுவர் மேலிருந்து உட்பக்கம் குதித்தான் அருணகிரி. அந்தச் சத்தம் கேட்டு அவள் திரும்பிப் பார்த்தாள். வியப்பாலும் மகிழ்ச்சியாலும் அவளது கண்கள் விரிந்தன.

அருணகிரியும் அவளைப் பார்த்து இலேசாக முறுவலித்தான். அதில் ஜீவ

## பிரதாபம்!



"என்ன? விழாவுக்குக் கூட்டம் வரணுமா? கடற்கரையிலோ, ரேஸ் கோர்ஸிலோ விழாவை நடத்தினால் போகிறது!"

"நிதி திரட்டிக் கொடுத்தால்... தீ...தீ...தீ... வாங்கிக்கொள்ள மாட்டேன் என்று சொல்லிவிடப் போகிறேன்....?"

"என்ன? வெளுப்பாக்குவதற்குரிய கறுப்புப் பணம் இருக்கணுமா? நானே விழாச் செலவுகளை ஏற்கணுமா?.......தலையைச் சுற்றுகிறதே!...."

வில்லை, உற்சாகம் இல்லை. பசிக் களைப்பும், தூக்கக் கிறக்கமும் சேர்ந்து அவனை அப்படி வதக்கி விட்டிருந்தன. பின்னால் கைகளைக் கோத்துக் கொண்டு தயங்கித் தயங்கி அவளை நோக்கி நடந்தான் அவன்.

அவள் சட்டென்று பார்வையைத் திருப்பிக் கொண்டாள். ஒருவித அலட்சியத்துடனும் அவசரமாகவும் பாத்திரங்களை எடுத்துக் கூடையில் அடுக்கலானாள்.

அருணகிரி அவளருகில் சென்று அவளையே சில விநாடிகள் கூர்ந்து பார்த்துக்கொண்டு நின்றான். பிறகு மெல்லச் சிரித்தவாறு, ''கொஞ்சம் குடிக்கத் தண்ணி கிடைக்குமா?'' என்று கேட்டான். பசிக் களைப்பால் அவன் குரல் கம்மிக் கரகரத்தது.

அவள் அவனை நிமிர்ந்து பார்க்காமலே, ''தண்ணி வேணும்னா அதோ குழாய் இருக்குதே; போய்க் குடிக்கலாம்'' என்றாள் உள்ளடங்கிய செருக்குடன்.

சற்றுத் தொலைவில் ஒரு வட்டத் தொட்டியின் நடுவே குடிநீர்க் குழாய் ஒன்று இருக்கத்தான் செய்தது. பள்ளி மாணவர்களுக்கென ஏற்படுத்தப் பட்டது அது.

அசடு வழிய நின்ற அருணகிரி, ''ஆமாம்; அதோ குழாய் இருக்கு இல்லே?'' என்றவாறு அங்கு செல்லத் திரும்பிய சமயம் அவள் கூஜாவிலிருந்து ஒரு தம்ளரில் தண்ணீர் ஊற்றுவதைப் பார்த்துத் தயங்கி நின்றான்.

தலைநிமிராமல் தம்ளரை நீட்டினாள் அவள். இளநகை புரிந்து கொண்ட அருணகிரி தண்ணீரை வாங்கி நின்றபடியே அண்ணாந்து 'மடக்' 'மடக்' கெனக் குடித்தான். அவனது காலியான வயிற்றில் அந்தத் தண்ணீர் சலசல வென்ற ஒலியுடன் இறங்குவது கேட்டது. அத்துடன் அண்ணாந்த வாக்கில் நின்றதால் அவன் போட்டுக் கொண்டிருந்த அழுக்குப் பனியன் மேலே ஏறி, கால் சராய் கீழே இறங்கி விட, வயிறு உட்குழிந்து சுருங்கிக் கிடப்பதும் தெரிந்தது.

இதை ஓரக் கண்ணால் கவனித்த அந்தப் பெண், ''சாப்பிட்டாச்சா?'' என்று மெல்லிய குரலில் கேட்டாள்.

தண்ணீரைக் குடித்து முடித்த அருணகிரி ''ஊம்'' என்றவாறு வாயைத் துடைத்துக் கொண்டான்.

''சாப்பிட்ட மாதிரி தெரியலியே?''

அருணகிரி இதற்குப் பதில் ஒன்றும் சொல்லாமல் சிரித்துக் கொண்டான்.

அந்தப் பெண் அவனைப் பரபரப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள். அவளது கண்களில் மட்டுமல்லாது உடலிலும் ஒருவிதத் துடிப்புத் தென்பட்டது. தன் சோற்றுக் கூடைக்குப் பக்கத்தில் தனியாக எடுத்து வைத்திருந்த ஓர் எவர்சில்வர் டிபன் காரியரை அவசரமாக எடுத்துத் திறந்தாள். ஆறு அடுக்குகள் கொண்ட அந்தக் கேரியரில் பலவிதமான உயர்தர பதார்த்த வகைகளும், சோறும், குழம்பும் இருந்தன. அவையெல்லாம் கை படாமல் கரண்டியால் எடுக்கப்பட்ட பின் கால்வாசியும் அரைவாசியுமாக மீதமானவை. யாரோ பெரிய அதிகாரி ஒருவருக்குப் போன பகல் உணவு போலும் அது.

''இப்படி உட்காருங்க! இது எனக்காக எடுத்து வைத்த சாப்பாடு; எச்சில் இச்சல் எதுவும் கிடையாது'' என்று தலை குனிந்தபடி தணிந்த குரலில் சொல்லிக் கொண்டே பக்கவாட்டில் திரும்பி ஒரு கல்வாழைச் செடியிலிருந்து அகலமான இலை யொன்றைக் கிள்ளி எடுத்துத் துடைத்து விட்டு எதிரே விரித்து வைத்தாள் அவள்.

அவளுடைய இந்தப் பேச்சிலும் செயலிலும்தான் என்ன கனிவு! என்ன குழைவு!

இடுப்பின் மேல் இரு கைகளையும் வைத்தவாறு அவளையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த அருணகிரியின் மனத்தில் திடுமென்று ஓர் எண்ணம் கிளர்ந்தது. 'ஆமாம்; இவள் சோறு போட்டு விட்டுக் காசு கேட்டால் நான் எங்கே போவது? என்னிடம் இப்போது பைசாக்கூட இல்லையே!' — அவன் தயங்கினான்.

''உங்களுக்கு நேரமாக வில்லையா? உட்காருங்க!'' என்று ஒருவித உரிமை கலந்த அதிகார மிடுக்குடன் சொன்ன அவள், சோற்றுப் பாத்திரத்தை எடுத்தாள்.

''இதோ பார், என்கிட்ட இப்ப காசு கீசு கிடையாது. கடனுக்குப் போடறதுன்னா சொல்லு, சாப்பிடறேன்!'' என்றான் அருணகிரி அமர்த்தலான குரலில்.

அவள் அவனை ஒரு கணநேரம் தலையைச் சாய்த்துப் பார்த்தாள். பிறகு வெடுக்கென்று முகத்தைச் சுளித்து வேறு பக்கம் திரும்பிக் கொண்டு, ''கடனுக்குத்தான் போடுவேன்; ஆனால், காசுக் கடனுக்கு இல்லே!'' என்றாள்.

இதைக் கேட்டு அருணகிரி அப்படியே வாயடைத்து மலைத்துப் போனான். 'என்ன அற்புதமான பதில் இது! கல்வி அறிவு பெறாத இந்த ஏழைப் பெண் இத்தனை நாசுக்காகவும், சாமர்த்தியமாகவும் பேச எப்படி எங்கே கற்றாள்?'— பிரமித்த நிலையில் விழியசைக்காது அவ







● பல நல்ல காரியங்களைச் செய்து வரும் மேல் மாம்பலம் ஸ்ரீ பக்த ஸமாஜத்தினர் மே 18ந் தேதியன்று ஸ்ரீ ஆதி சங்கரர் ஸ்ரீ காமகோடி பெரியவாள் இருவருக்கும் ஜயந்தி உத்ஸவம் கொண்டாடினர். இந்த நல்ல சந்தர்ப்பத்தில் பல ஆண்டுகளாகத் தியாகராய நகரில் வெகு சிறப்பாக ராமநவமி உத்ஸவமும், தியாகப் பிரம்ம உத்ஸவமும் நடத்தி வரும் (ஸிம்ப்ஸன்) ஸ்ரீ எம். வி. வெங்கட்ராமன் அவர்களுக்கும் பாராட்டு வழங்கப்பட்டது. ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள், ஸ்ரீ வேங்கட்ராமனுக்கு வழங்கியுள்ள ''ஸ்ரீராம பக்தி சிரோமணி'' என்ற விருது இவ்விழாவில் அவருக்குச் சூட்டப்பட்டது.

● புரசைவாக்கம் ஸ்ரீ வேதோத்தாரண வைதிக சபையினர் மே 5லிருந்து 10வரை ஸ்ரீ சங்கர ஜயந்தி உத்ஸவம் சிறப்பாகக் கொண்டாடினர். வீதி உத்ஸவக் காட்சியைக் காணலாம்.

---

ளைப் பார்த்தவாறு மெல்லக் குத்துக்காலிட்டு உட்கார்ந்தான் அவன்.

பக்கவாட்டில் உடம்பைத் திருப்பிக் கொண்டு இலையை அவன் எதிரே இழுத்து வைத்து விட்டுப் பாத்திரத்திலிருந்த உணவை அள்ளிப் போடப் போன அவள் அவனுடைய கையைப் பார்த்து, ''ஐயைய! என்ன இது கையெல்லாம் ஒரே எண்ணெயும் கிலுமாக் கறுத்துக் கிடக்குது? இந்தக் கையாலே சோத்தை எப்படிப் பிசைஞ்சு சாப்பிடறதாம்?'' என்று பார்வையை உயர்த்தாமல் கேட்டாள்.

''இது மாட்டு வண்டிக்குப் போடற கிலு இல்லே; சைக்கிளுக்குப் போடற கிரீஸ்!'' என்று சொல்லிச் சிரித்தவாறு தன் இரு கைகளையும் சேர்த்துத் தேய்த்துத் துடைத்துக் கொண்டான் அருணகிரி.

''கிரீஸ்னு நெய்யின்னு நினைப்பாக்கும்!'' என்று கூறி ஒரு நொடிப்பு நொடித்த அவள், ''சரி, பரவாயில்லே! நான் சோத்தைப் பிசைஞ்சு உருட்டிக் கையிலே வைக்கிறேன்; அப்படியே அண்ணுந்த வாக்கிலே போட்டுக்குங்க!'' என்றாள்.

இதைக் கேட்ட அருணகிரிக்கு இனம் புரியாத ஓர் இன்பக் கிளுகிளுப்பு ஏற்பட்டது. கூச்சத்துடன் உடம்பை நெளித்தான் அவன்.

அவள் அவனை ஓரக் கண்ணால் பார்த்தவாறு சோற்றில் குழம்பை ஊற்றிப் பிசைந்து ஒவ்வொரு கவளமாக உருட்டி அவனுடைய உள்ளங்கையில் வைத்தாள்.

அவனுக்கு நல்ல பசி. அத்துடன் சுவையான உணவு கையில் இருந்தது. ஆனாலும் ஏதோ கனவுலகில் சஞ்சரிப்பவன் போல் மிக மிக நிதானமாகவே உண்டான். அமிர்தத்தை உண்பது போன்ற ஒரு பக்தி மயக்கம்; பரவசக் கிறக்கம்!

(தொடரும்)



## அத்தியாயம் 21

# குடை ராட்டினம்

எஸ். ரங்கநாயகி

காலப் போக்கின் அடிகளில் தன் வாழ்வில் இத்தனை மாறுதல்கள் ஏற்படும் என்று ரமா நினைத்திருக்கவேயில்லை. தாயற்ற குழந்தையாக வளர்ந்தாள். அப்பாவுக்கும் குடும்பத்துக்கும் சம்பந்தமே இல்லை என்று நினைத்திருந்தாள். குழந்தைப் பருவத்துக்குப் பிறகு பள்ளிப் பருவம், கல்லூரிப் பருவம். தோழிகளின் இணைப்போடு வளரும் பருவக் கனவுகள். கல்லூரியின் உள்ளே படிப்பு, புத்தகம்; வெளியே வரும்போது பருவத்தைப் புரிய வைக்கும் உலகம்; படிக்கும் புத்தகங்களிலும் காதல் கதைகள், கவிதைகளிலும் பாக்களிலும் அதுவே.

ரமா இத்தனையையும் கடந்திருக்கிறாள். கல்லூரிப் படிப்புடன் எத்தனையோ கற்பனைகளும் கனவுகளும் விரிந்தன. அவளுக்கென்று ஒரு தோழன் கிடைத்தான். கனவுகள் மலர்ந்தன. எத்தனை இன்ப நாட்கள் அவை! பொழுது புலர்வது தெரியாது; போவது தெரியாது. கண்களை மூடினாலும் ஆனந்தம், திறந்தாலும் ஆனந்தம்! வாழ்வு முழுவதுமே இப்படி ஆனந்தமாகத்தான் இருக்கும் என்று இறுமாப்புற்றிருந்தாள். துயரம் என்று ஒன்று உண்டு என்ற நினைப்பே இல்லாத காலம். ஆனால் இப்போதோ முன்னே நிற்பவை எல்லாமே இறங்க இறங்கத் துயரப் படிக்கட்டுகளாகவே தான் காட்சி அளித்தன.

மலரை அரிக்கத் தொடங்கும் புழுவாக அத்தை பொன்னம்மா அவள் வாழ்வின் இடையே குறுக்கிட்டாள். அவள் உறவு கொண்டாடி வந்திராவிடில் ரூபகுமார் அவர்களுக்கு உறவு என்பது தெரிந்திருக்கப் போவதில்லை. சம்பந்தத்தைக் காட்டிப் பெண் பேசும் அளவுக்குக் கொண்டு வந்து நிறுத்தி விட்டு அவள் மறைந்து விட்டாள். பளிச்சென்று புகுந்து கண்ணின் பார்க்கும் சக்தியை மறைத்துவிட்டு மறைந்து விடும் மின்னலைப் போலாக அவள் வருகை ஆகிவிட்டது!

மலர் வாழ்வின் இடையே மீண்டும் எத்தனை குறுக்கீடுகள், எத்தனை தலைவேதனைகள். மலைபோல் வந்து பனி போல் நீங்கிவிடவில்லை. மலை போலவே நின்று விட்டன. எத்தனையோ வெள்ளங்களை நீந்திக் கல்யாணக் கட்டம் வரை வந்தவர்கள் ஸ்கூட்டர் விபத்து என்னும் பிரளய வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டார்கள். அவர்கள் வாழ்வே நாசமாகி விட்டது.

இப்போதோ...

சேறும் சகதியுமாக வாழ்க்கை ஆரம்பித்தது. ரமா அதில் எத்தனை தவித்துக் கொண்டிருந்தாள்! தாய்மைக்கு இலக்கானபோது அவள் நெஞ்சு என்னவெல்லாமோ நினைத்தது.

மீண்டும் சூறாவளி! அந்தச் சூழ்நிலையின் சூறாவளியில் அவள் தன் மனத்தை எப்படியெல்லாமோ மாற்றிக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. ரூபகுமார் அவள் காதலை நாசம் செய்தவன்தான். அந்த ஓர் எண்ணமே தீராப் பகைக்கும் வெறுப்புக்கும் ஆளாக்கக் கூடியது. பல்வகை மனப் போராட்டங்களுடன் ரூபகுமாரோடு வாழ்க்கையைத் தொடங்கினாள். தாய்மையையும் தரித்தாள்.

இப்போதோ மாறக் கூடாததெல்லாம் மாறி அவளைத் திகைப்பில் ஆழ்த்தியது. வெறுத்துத் தள்ளினவனை ஆதரவுடன் பாதுகாக்க முற்பட்டாள்.

உலகத்தின் கண்களில் கணவன்—மனைவி என்று ஆனபின் அந்தக் கடமையை ஆற்றத்தானே வேண்டும்?

பார்க்கப் போனால் ரூபகுமார் அவளை உண்மையாகவே நேசித்தான். அவள் விருப்பப்படி யெல்லாம் இருக்க அனுமதி கொடுத்தான். ஆனால் வாசுவைக் காணும்போது மட்டும் வேதாளம் முருக்க மரம் ஏறிக்கொண்ட கதையாகத் தான் நாட்டிய வெற்றிக் கொடியைக் காட்டி அவளைக் கதற அடிக்க முனைந்தான்.

ரமா வாசுவை நெஞ்சோடு நிறுத்தி வைத்துக் கொண்டிருந்தது அவனுக்குத் தெரியும். காலப் போக்கில் அந்நிலை மாறிவிடும் என்றுதான் எதிர்பார்த்தான். கடைசியில் அத்தனையும் அவனுக்கே வேதனைப் புலன்களாக மாறி விட்டன.

வெளிப் பார்வையோடு நின்றிருந்த அவன் கண்கள் ரமா தாய்மையோடு நின்றபோது அவளை ஊடுருவி நோக்க ஆரம்பித்தன. டாக்டரின் எச்சரிக்கை வேறு அவனுடைய மனத்துக்கு எச்சரிக்கையாக அமைந்தது.

'எல்லாவற்றுக்கும் நீயே காரணம்... நீயே காரணம்...' உள்ளுணர்வு சாட்டையைச் சொடுக்கவே ரூபகுமார் பொறி கலங்கிப் போனான். அதனால் கூடுமானவரை அவளிடமிருந்து அவன் விலகியே இருக்க முயன்றான். பலன், ரூபகுமார் வீட்டுக்கு வெகு நேரம் கழித்துத் திரும்ப ஆரம்பித்தான். ரூபகுமாரின் இயல்பில் இப்படி ஒரு மாறுதலைக் கவனித்த ரமா ஒரு விஷயத்தை நன்கு உணர்ந்தாள். 'அவள் அவனை அசட்டை செய்வதால் இருவர் வாழ்வும் திரும்ப மலர்ந்துவிடப் போவதில்லை.' அதனால் பச்சாதாபம் என்னும் தண்டனையிலேயே அவனை நிற்க வைத்து மன்னிப்பதன் மூலம் அவன் வாழ்க்கை தளிரச் செய்துவிட வேண்டும்' என்ற முடிவுக்கு அவள் வந்தாள். அவன் அவளுடைய கணவன் என்பது மட்டுமல்ல, பிறக்கப் போகும் குழந்தைக்கு அவனேதான் அப்பா. இருவரின் உறவையும் பறைசாற்றிக் கொண்டு குழந்தை இவ்வுலகில் வளைய வரப் போகிறது. தன் வயிற்றில் உதிக்கப் போகும் அச்சிசுவை அவள் கண்டிப்பாக வெறுக்க முடியாது. 'அம்மா!' என அது மழலை கூட்டி அவளைத் தேடி வரும்போது மெய் சிலிர்க்கும் பேரன்போடு அதை அணைத்துக் கொள்ளத் தான் வேண்டியிருக்கும். குழந்தையை வளர்க்க மனம் மசியும்போது அதன் தந்தையை மட்டும் அவள் ஏன் வெறுக்க வேண்டும்? இத்தனைக்கும் ரூபகுமார் அவளை அடித்துத் துன்புறுத்தவில்லை. இப்போதோ தான் செய்து விட்ட மனக் கொடுமைக்குத் தானே பச்சாத்தாபத் தண்டனையை விதித்துக் கொண்டிருக்கிறான்.

இப்படியெல்லாம் இரவும் பகலுமாக நினைத்து நினைத்து மனம் தேறிய ரமா, ரூபகுமாருடன் மெள்ள நெருங்கிப் பழக ஆரம்பித்தாள். அவன் மனச் சோர்வோடு அமர்ந்து விடும்போது அவனுக்குத் தன் கையினால் சாப்பாடு போட்டு உண்மை மனைவியாக நடந்து கொண்டாள். அவனோடு தானாகவே பேச முற்பட்டாள். அவள் நல்லெண்ணமா இப்படி விபரீத பலனை அளிக்க வேண்டும்?

ரமா நெருங்கி வர நெருங்கி வர ரூபகுமார் துயரமே கண்டான். பச்சாத்தாப நிலையில் அவன் வருந்துவதைக் காணச் சகியாமல்தான் இரக்கத்தின் நிழலில் ரமா தன்னுடன் பழகுகிறாள் என்று அவனுக்குத் தோன்றியது. இரக்கத்தில் பிறந்த அந்த அன்புக்கும் உண்மை அன்புக்கும் உள்ள பேதம் தெரியாதவன் அல்ல அவன்! எனவே, அவள் நினைத்ததற்கு மாறாக அவன் மேலும் விலகிப் போக முயன்றான்.

இரவுக் காலங்களில் ரூபகுமார் தாமதமாக வந்ததை ரமா கவனித்தாள். அத்துடன் கண்கள் சிவக்கத் தள்ளாடி வந்த காரணத்தையும் புரிந்து கொண்டாள். ரூபகுமாரின் வீட்டின் உப்பைத் தின்று



வளர்ந்த வேலைக்காரர்கள் மிகுந்த நன்றி உடையவர்கள். வீட்டில் பணி புரிபவர்களான. டிரைவரும் தோட்டக்காரனும் சமையல்காரனும் வீட்டில் நடக்கும் நிகழ்ச்சிகளை நன்கு அறிவார்கள். ஆயினும் இதுவரை வெளியில் மூச்சு விட்டது கிடையாது. அல்லது ரூபகுமாரைப் பற்றி ரமாவிடமும், ரமாவைப் பற்றி ரூபகுமாரிடமும் கூடக் கூறியது கிடையாது.

கடைசியில் ரமா டிரைவரிடம்தான் கேட்டுத் தெரிந்து கொண்டாள்.

''எனக்கு நன்றாகத் தெரியும் அம்மா. எஜமானுக்கு எந்தத் தீய பழக்கமும் கிடையாது. ஆனா இப்போதான்... போகிறாரு.'' சொல்ல வந்ததைச் சொல்லத் தெரியாமல் முடித்து விட்டான் ரூபகுமாரின் டிரைவர்.

* * *

அன்று ரூபகுமார் நேரம் கழித்து வீடு திரும்பியபோது ரமா படுத்திருக்கவில்லை. விழித்துக் கொண்டிருந்தாள். அவளைப் பார்த்துவிட்டு ரூபகுமார் கொஞ்சம் பீதியை அடைந்தான். 'ரமா இப்படிக் கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாளே, என்னவெல்லாம் கேட்பாளோ?' என்று எண்ணினான். தவறு செய்பவர்களுக்கு யாரைப் பார்த்தாலும் சாதாரணமாக ஏற்படக் கூடிய பீதிதானே இது?

''எங்கே போயிருந்தீர்கள் இவ்வளவு நேரம்?'' ரமா அவன் நினைத்தது போல் கேட்டே விட்டாள்.

''எங்கும் இல்லை ரமா!'' தாயாரின் அடிக்குப் பயந்து சமாதானம் கூறும் சிறு பிள்ளையாகப் பதில் கூறிவிட்டு அவன் கண்களை மூடிக்கொண்டான்.

''நீங்கள் எனக்கு விளக்கம் தர வேண்டிய அவசியமில்லை. ஒன்று மட்டும் நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள். பிறக்கப் போவது உங்கள் குழந்தை. தந்தை இப்படிப்பட்டவர் என்று உலகம் கூறி அந்தக் குழந்தையை ஏளன நோக்கோடு பார்க்கும்படிமட்டும் விட்டு விடாதீர்கள்!'' இதற்கு மேல் ரமா ஒன்றும் கூறவில்லை.

* * *

மறுநாள் பொழுது விடிந்தால் காந்திக்கு விவாகம். முதல் நாள் கூடப் போகாவிட்டால் எல்லோரும் என்ன சொல்லுவார்கள்? ரமா இப்படி நினைத்துக்கொண்டிருந்த நேரத்தில் டிரைவர் வந்து, ''அம்மா! எசமானை எப்படியும் இன்று மாலை வீட்டுக்கு அழைச்சுட்டு வந்துடறேன். நீங்கள் அவங்களோடு கல்யாணத்துக்குப் போகலாம்!'' என்று கூறினான்.

டிரைவருக்கு வேலை வைக்காமலே ரூபகுமார் வீட்டுக்கு வந்தான். அந்த நேரம் பார்த்தா ஆனந்த் அவர்களை அழைத்துப் போக வரவேண்டும்?



# வாழ்வில் முன்னேற விரும்பும் இளைஞர்களில் நீங்களும் ஒருவரா?

முன்னேற விரும்புவோர்க்கு வாழ்வே ஒரு எதிர்நீச்சல்.
அதைச் சமாளிக்க இணையற்ற ஆர்வம், ஈடில்லா முயற்சி.
உத்வேகம் முதலியன உறுதுணை நிற்கும்.

இவை ஒருங்கிணைந்த இளைஞரா நீங்கள்?

அப்படியானால் உங்களுக்கேற்ற சைக்கிள் பிலிப்ஸ்
உங்கள் துடிப்புமிகு தன்னம்பிக்கை, உறுதிமிகு ஆர்வம்,
இவற்றை அப்படியே பிரதிபலிக்கிறது பிலிப்ஸ் சைக்கிள்.

உயரிய எஃகினால் நுண்ணிய வேலைப்பாட்டுடன்
உருவாக்கப்படும் பிலிப்ஸ் உறுதியில் தன்னிகரற்றது,
சவாரிக்கு சுகமானது, தோற்றத்தில் எடுப்பானது.





இந்தியாவில் தயாரிப்போர்: டிஐ சைக்கிள்ஸ்
ஆஃப் இந்தியா, அம்பத்தூர், சென்னை-53
உரிமையாளர்கள்: டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆஃப்
இந்தியா லிமிடெட், சென்னை-1
பதிவு பெற்று உபயோகிப்போர்.

• J.A. பிலிப்ஸ் கம்பெனி லிமிடெட்,
யு.கேயின் பதிவுபெற்ற டிரேட் மார்க்குகள்

TIC/PH/5382

வெற்றிப்பாதையில்
வேகமாக முன்னேற

## பிலிப்ஸ்

சைக்கிள்

ஆனந்தைக் கண்டதும் ரூபகுமார் எப்படி மிரண்டு விட்டான்? ஆனந்த் கோபத்தில் கண்டபடி ஏசியதுதான் அவள் நெஞ்சில் முள்ளாகக் குத்தியது. வெண்ணெய் திரண்டு வரும் நேரத்தில் இப்படியா அனலைக் காட்டிச் சிதறச் செய்வார்கள்? ஆனந்த் நல்லவன், அவள் குடும்பத்தில் நடப்பவற்றை அவன் அறிய மாட்டான் என்ற நினைவே அவளுக்குத் தோன்றவில்லை.

ரூபகுமார் வந்த சுவட்டோடு திரும்பி விடவே, அவளுடைய கோபம் முழுதும் ஆனந்தின் மீது பாய்ந்தது. எப்படி எல்லாம் பேசிவிட்டான் அவனை? 'வீட்டை விட்டு வெளியே போ' என்று ரௌடிகளைப் பார்த்துக் கூச்சலிடும் சொற்களை அந்த நல்லவன் மீதல்லவா உபயோகித்து விட்டாள்?

ஒருபக்கம் ரூபகுமார் சென்றுவிட்டான். மற்றொரு பக்கம் ஆனந்தைத் துரத்தி விட்டாள்!

ஒரு மூலையில் முடங்கி எவ்வளவு நேரம் அவள் விசித்து விசித்து அழுதிருப்பாள்! நெஞ்சு வெடித்து விடும் போல் இருந்தது. இத்தனைக்கும் அவள் உடல்நிலை ஈடு கொடுத்தது ஆச்சரியம் தான்! எத்தனை மயக்கங்களுக்கு அவள் ஆளாகி யிருந்திருக்கிறாள்? இப்போது மனமே வெடித்து விடும்படியான துயர நிகழ்ச்சிகள் எதிரே இருந்தும் அனைத்தையும் தாங்கிக் கொள்ளும் சக்தி எங்கிருந்து வந்ததோ? ரூபகுமாரை நல்ல வழியில் திருப்ப வேண்டும் என்ற ஒரே எண்ணம் அவளுக்கு எல்லையற்ற அசுர சக்தியைக் கொடுத்திருக்க வேண்டும்!

வீட்டுக்கு வந்த கணவன் மீண்டும் சென்றுவிட்டானே என்ற துயரத்தில் ஆனந்தைக் கண்டபடி திட்டி அனுப்பி விட்டோமே என்ற துயரமும் அவள் மனத்தை வாட்டத் தொடங்கிவிட்டது. ரூபகுமார் அன்று இரவு மீண்டும் வீடு திரும்ப மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும்.

இரவு முழுவதும் அவள் கண் விழித்திருந்தாள். விடியும் நேரம். இருள் இன்னும் முழுவதும் அகலவில்லை. அந்த நேரத்தில் ஓர் அசுரத் துணிச்சல் அவளுக்குத் தோன்றியது. தன்னையறியாத ஒரு வேகம்.

விருட்டென்று எழுந்து அவள் முகத்தைக் கழுவிக் கொண்டாள். தலையை மேலோடு கோதி விட்டுக் கொண்டு வேறு புடவை உடுத்திக் கொண்டாள். ஷெட்டிலிருந்து தன் காரைக் கிளப்பினாள். சத்தம் கேட்டு அங்கு வந்த டிரைவரைப் பின் ஸீட்டில் அமரும்படி சைகை காட்டினாள். அடுத்த நிமிடம் கார் அசுர வேகத்தில் 'கிளப்'பை நோக்கித் தெருக்களைக் கடந்து சென்றது.

ரூபகுமார் வெகு நேரம் வரையில் அவர்கள் கிடத்திய நிலையில் இருந்தான். ஓரளவுக்கு நினைவு திரும்பும்போது புரியாத சொற்களாகப் பேசினான். தூக்க மருந்து கொடுத்து ரமா அவனை நன்றாகத் தூங்க வைத்து விட்டாள்.

இத்தனைக்கும் இடையே ரமாவுக்குக் காந்தியின் நினைவாக நினைவு வந்து கொண்டே இருந்தது. 'இந்த நேரத்துக்கு முகூர்த்தம் முடிந்திருக்கும்! காந்தியின் முகம் எவ்வளவு மலர்ச்சியாகக் காணப்படும்! காந்தியின் காதல் நிறைவேறுகிறது... வாசு! ஆமாம், அவரும் ஆனந்தமாகத்தான் காணப்படுவார். அவளைப் பற்றி மறந்து விட்டிருப்பார். மறந்துவிட வேண்டு

## விளையாட்டுக்குள் ஒரு விளையாட்டு

### மனக் குரங்கு!

நீச்சல் கலையிலே நல்லறிந்தவர் என்று புகழ் பெற்றவர் நார்மன் ராஸ். அவர் நீச்சல் போட்டியில் அமெரிக்காவின் சாம்பியனாகத் திகழ்ந்தவர். 1920ம் வருஷ ஒலிம்பிக்கில் வெற்றி வாகை சூடியவர்.

நார்மன் ராஸ் ஒரு நாள் மிச்சிகன் ஏரியில் நீண்ட கால்களை உடைய ஒரு வாலிபன் யந்திரம் போல் நீச்சலடித்துச் செல்வதைக் கண்டார். அவனைப் பார்த்த மாத்திரத்திலேயே நார்மன் ராஸுக்கு மனத்தில் தோன்றியது, 'நம்மோடு நீச்சலில் போட்டி போடக் கூடியவன் இவன்' என்று. அவனை நீரை விட்டு வெளியே வரச் சொல்லி விசாரித்தார். அவனுக்கு நீச்சல் கலையின் அரிச்சுவடி கூடத் தெரி



யாது என்பதைக் கண்டு கொண்டார். உடனே அவனுக்கு முறையான பயிற்சி அளிக்கத் தொடங்கினார்.

அந்த வாலிபன் சில மாதங்களில் உலக ரிகார்டை ஏற்படுத்தினான். ஒலிம்பிக்கில் வெற்றி பெற்றான். அமெரிக்காவுக்குப் பெரும் புகழ் தேடித் தந்தான்.

சினிமாவில் டார்ஜானாக நடித்த ஜானி வெய்ஸ் முல்லர்தான் அந்த இளைஞன்.

வெய்ஸ்முல்லர் புகழேணியில் மேலே மேலே ஏறிச் சென்றான். ஆனால் அவனைப் புகழேணியில் ஏற்றி வைத்த ஆசான் நார்மன் ராஸ் இருந்த இடம் தெரியவில்லை.

மிச்சிகன் ஏரியில் அந்தப் பையன் நீச்சலடித்ததைப் பார்த்த அந்தக் கணமே தம்மைவிடக் கெட்டிக்காரன் இருக்கிறான் என்று தோன்றிவிட்டது நார்மன் ராஸுக்கு. பிறகு அவர் தன்னம்பிக்கையை இழந்து விட்டார்! அதன் பிறகு அவரால் உயர முடியவில்லை!

— குன்றிமணி

மென்றுதானே அவன் தன் விவாகத்தின் அடிப்படைக் காரணத்தையே மறைத்து விட்டிருந்தான்! அவள் மீதுஅவன் வெறுப்பை உமிழ்ந்தால்தானே காந்தியுடன் அவன் இன்பமாக வாழ முடியும்?

**வா**சுவையும் காந்தியையும் அழைத்துக்கொண்டு கோசல்ராம் வரப்போவதாகச் செய்தி வரவே, ரமா திடுக்கிட்டாள்.

உடனே ரூபகுமாரின் நினைவு அவளுக்கு வந்தது. மாடிப் படிகளில் ஏறி விரைந்தாள். முன்னுரை பின்னுரைக்கு நேரமில்லாததால் அவள் ரூபகுமாரிடம் கூறினாள்: ''வாசுவையும் காந்தியையும் மாலையோடு அப்பா அழைத்து வரப் போகிறாராம். இரண்டு நாட்களாக நீங்கள் ஊரிலில்லை என அப்பாவிடம் சொல்லி வைத்திருக்கிறேன். அதனால் அப்பா வரும்போது தயவு செய்து நீங்கள் கீழே இறங்கி வர வேண்டாம். நீங்கள் ஊரிலில்லை என்பதாகவே இருக்கட்டும்!'' என்றாள்.

'வாசுவும் ரமாவும் நேராகச் சந்திக்கும்போது...அந்தக் காட்சியைக் காண வேண்டாமென்றுதான் ரமா அவனைக் கீழே இறங்கி வரவேண்டாம் என்கிறாளோ? பாவம், ரமா, விவாகத்துக்குக் கூடப் போகவில்லை. வாசு எப்படியோ ரமாவை மறந்து காந்தியைக் கைப் பிடித்துவிட்டானே! காந்தியும் அவனை விரும்புவதால் அவன் வாழ்வில் நெருடல் இருக்காது...' ரூபகுமாருக்கு இப்படியெல்லாம் சிந்தனை ஓடியது.

ரமா கூறியது போலவே அவர்கள் வந்தபோது ரூபகுமார் மாடியிலிருந்து கீழே இறங்கி வரவில்லை. ஆனால் கண்ணால் காணாவிடினும் கீழே நடப்பவற்றை அவன் காதால் கேட்டுக் கொண்டுதான் இருந்தான்!

கீழே ரமா திக்குமுக்காடிக் கொண்டிருந்தாள். கட்டுப்படுத்தி அடக்கியிருந்த உணர்ச்சிகள் விடைபெற, ''ரமா... நீ... இப்...'' என்று ஆரம்பித்ததும், அவளும் 'வா...சு' என்று நெகிழ்ந்து விட்டாள். அவள் மனம் அவளை ஏமாற்றி அவளது மனத் இடத்துக்கு விடை அளித்து விட்டது.




''அவசரப்படுத்தாதே! அநுபவிக்கச் சாப்பிடணும்டா!''

''சாப்பிட்டுவிட்டுத்தான் நாம் அநுபவிக்கப் போறோமே!''

பிரிவுக்குப் பிறகுகூடும் சந்திப்பின் நெகிழ்ச்சியாக அது அமைந்ததும், உடனே வாசு வெளியேறியதும், அவள் கூவியதும், ஆனந்த் வந்ததும் எல்லாமே எதிர்பாராத நிகழ்ச்சிகளாகக் கண் இமைக்கும் நேரத்தில் நடந்து விட்டன. எல்லாவற்றுக்கும் மேலாகக் காந்தியின் கோபம். அப்பப்பா! என்ன பயங்கரம்!

மாடியிலிருந்த ரூபகுமாருக்கு அனைத்தும் புரிந்தது. 'வாசு! வாசு' என்று ரமா கூவியது அவனைக் கலங்க வைத்தது. மீண்டும் மனச் சுழலில் அவன் சிக்க ஆரம்பித்து விட்டான். அதில் தன்னைச் சமாளித்துக் கொள்ள முடியாத ஒரு நிலை. செவிகளில் விழும் வேதனைப் பேரிரைச்சலை அவனால் தாங்க முடியவில்லை. அதற்குமேல் ஆனந்த் வந்து ரமாவுடன் பேச ஆரம்பித்ததும் வேதனையுடன் அச்சமும் சேர்ந்து கொண்டது.

மெள்ள மெள்ள அவன் பார்வை ஓரத்தில் இருந்த பிரிஜிடயரில் சென்றது. அந்த பிரிஜிடயரை அவன் தன் அறைக்கெனத் தனியாக வைத்துக் கொண்டிருந்தான். அதை அவனைத் தவிர வேறு யாரும் திறப்பதில்லை. அதை அவன் திறந்து தனக்கு வேண்டியதை எடுத்தபொழுது...

''இங்கே பாருங்கள்!''

கர்ஜனையும் கட்டளையுமாக வந்த குரல் ரூபகுமாரைத் திடுக்கிட்டுத் திரும்பச் செய்தது. அங்கு ரமா காளி ரூபமாக நின்று கொண்டிருந்தாள். அவள் கையில்...

''ஐயோ ரமா! என்ன இது?'' ரூபகுமார் கூவியபடி அவள் அருகில் விரைந்தான்.

''இதைப் பார்த்தீர்களா? எனக்கும் வேறு வழியில்லை. இதை உபயோகித்துவிடப் போகிறேன்.'' ரமா தெளிவாகக் கூறினாள்.

ரூபகுமார் ஓடிச் சென்று அவள் கையிலிருந்ததைப் பிடுங்க முயன்றான். ''வேண்டாம் ரமா! வேண்டாம்!'' என்று தீனமாகக் கதறினான்.

**ஆ**னந்தை அனுப்பிவிட்டு ரமா கீழே எவ்வளவு நேரம் உள்ளத்தோடு போரா

நடு இரவில் வீடு திரும்பும் ரூபகுமாரை ரமா சந்திக்கும் கட்டத்தை இவ்விதம் வண்ண அட்டைச் சித்திரமாகத் தருகிறார் ஓவியர் விஜயா.


CAMY
கேமி கடிகாரம்
நாளுக்கு 24 மணி
நேரமும், வருடம் 365
நாட்களும் கவர்ச்சி-
யையும், துல்லியமான
இயக்கத்தையும்
வழங்குகிறது.
பல மாடல்களிலிருந்து
தேர்ந்தெடுங்கள்—
எல்லாம் நியாயமான
விலை கொண்டவை.
RATAN BATRA/CW/TAM/91

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

## பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" — 17-A, பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 :: தந்தி: "GROWRICH"

**ஜூன் 1970-க்குரிய கீழ்க்கண்ட புதிய குரூப்புகள் ஆரம்பிக்கப்படுகின்றன**

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட குரூப்புகள்

| குறுகிய காலம்: 25 மாதங்கள் | | | நீண்ட காலம்: 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி: 13-6-1970 | | | சேருவதற்கு கடைசி தேதி: 27-6-1970 | | |
| முதல் ஏலத் தேதி: 14-6-1970 | | | முதல் ஏலத் தேதி: 28-6-1970 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | G | 125/- | 5,000/- |
| G | 20/- | 500/- | | | |

நீண்ட காலம்: 50 மாதங்கள் - ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

**சேருவதற்கு கடைசி தேதி: 20-6-1970 :: முதல் ஏலத் தேதி: 21-6-1970**

| வகுப்பு | தவணை ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTC | 20/- | 1,000/- |

வேலை நேரம்: காலை 8 மணி முதல் 10-30 வரை
மாலை 4 மணி முதல் 7-30 வரை

**வார விடுமுறை: திங்கட்கிழமை**

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்:
"பாலுஸேரி பில்டிங்ஸ்"
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி : தபால் பெட்டி 414 - சென்னை-5

கிளைகள்: பெங்களூர் - கல்கத்தா - புதுடெல்லி

இலவச பிரசுரத்திற்கு எழுதுங்கள்

சீட்டுகள் ஒழுங்குதல் கம்பெனியின் பொறுப்பைப் பொருந்தது

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

BBC - KALKI - 1005 - '70

டிக் கொண்டிருந்தாளோ? ஆனந்த் கூறிய வார்த்தைகள் நினைத்துப் பார்த்திராத பல இரகசியங்களை வெளியிட்டன! ஆனந்தை இவ்வளவு நாட்களாகப் புரிந்து கொள்ளாமல் இருந்தது எவ்வளவு பெரிய தவறு? தவறு என்றோ பேதைமை என்றோ சொல்லிவிட முடியாது. ஆனந்தின் உயர்ந்த குணம் என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். அவனிடம் உண்மைக் காதலின் உருவகத்தைக் கண்டாள். அவள் உடலே சிலிர்த்தது. தெய்விகத் தன்மையையும் தெய்வத்தையும் நேரில் கண்டுவிட்டது போன்ற ஒரு பரபரப்பு ஏற்பட்டது. திடீரென்று இரத்த ஓட்டத்தில் ஒரு புதுமையான அநுபவத்தை உணர்ந்தாள். எதை எதையோ அவள் பார்த்திருக்கிறாள். எதை எதையோ அவளே அநுபவித்திருக்கிறாள். ஆனால் இந்தப் புதுமையை அவள் கண்டதில்லை; கேட்டதில்லை.

ஒரு நாளில் எத்தனை நிகழ்ச்சிகள் அடுத்தடுத்து நேர்ந்து விட்டன! விடியற்காலையில் ரூபகுமாரை அழைத்து வருவதற்காகக் கிளப்பின் வாசற்படியை மிதிக்க நேரிடும் என்று அவள் நினைத்திருக்கவில்லை. ஒரு வேகம், ஒரு பிடிவாத உணர்ச்சி அவளை அப்படி உந்தித் தள்ளியது.

அடுத்து பிற்பகல் அவள் தந்தை வந்து போனது. அதற்குப் பிறகு வாசுவையும் காந்தியையும் தந்தை அழைத்து வந்தது. ஆனந்த் ஜகத்துடன் போன் செய்தது — எல்லாமே எதிர்பாராத நிகழ்ச்சிகள்தாம். அவன் முன்கூட்டிச் செய்தி அறிவித்திராவிட்டால் எவ்வளவு தர்மசங்கடமாகப் போயிருக்கும்! திடீரென்று அவர்கள் வந்து நின்றிருந்தால் அவள் தவித்துப் போயிருப்பாள்.

பிறகு எதிர்பாராத அந்தக் கடைசி ஒரு நிகழ்ச்சிக்குள் வியப்பும் அதிர்ச்சியுமாக மூன்று நிகழ்ச்சிகள் இடம் பெற்றுவிட்டன. வாசுவை மறந்தால்தான் ரூபகுமாரின் பச்சாத்தாபத்தை நீக்கி அவனை வாழ வைக்க முடியும் என்று அவள் எண்ணியிருந்தாள். அந்த அறிவு அவனை நேரில் கண்டபோது விடைபெற்று விட்டது. வாசு முதலில் குரல் கூட்டி 'ரமா' என்று ஆரம்பித்ததனாலா அல்லது அவனைப் பார்க்கும் போதே அவள் மனம் அவளை ஏமாற்றி விட்டதனாலா? ஓரொரு கல்லாக வைத்து வைத்து அடுக்கி இருவருக்குமிடையே சுவர் வைத்து மறைவு போட முயன்றாளே, அந்தச் சுவர் ஒரு சிறு மோதலையும் தாங்காமல் நிமிட நேரத்தில் இடிந்து சரிந்து விட்டதே! (தொடரும்)





















*freshness is a feeling*
*you can wear all day long*

*freshness is a fragrance*
*you can wear all day long*

*freshness is forbina*
*you can wear all day long*

Freshness is Forbina
Because Forbina is a deodorant as well as a talc. Checks excessive perspiration. Mildly antiseptic, Forbina prevents skin irritations, prickly heat and rashes. And it is gentle enough for the most tender skin.

**CIBA Cosmetics**

## பிரம்மச்சாரி சொல்லும் கல்யாணக் கதை

ராமசாமி ராமசாமி என்பவர் தம் பெண் கல்யாணத்துக்கு அமோகமாய் அமைந்து ஏற்பாடு செய்தார். முகூர்த்த வேளை நெருங்கிவிட்டது. மாப்பிள்ளை அலங்காரத்திலிருந்த குப்புசாமி பெண்ணின் கழுத்தில் முடியத் தாலிச்சரட்டைக் கையில் எடுத்தான். பெண் கழுத்தை நீட்டுகிறாள். குனிந்தவன் குப்புசாமி "நான் ஸ்டிரைக் செய்கிறேன்" என்று அறைகூவி நிமிர்ந்தான். "ஊதியத்தை உயர்த்து" என்ற குரல் குப்புசாமியிடமிருந்து வந்தது. "இன்னும் வரதட்சிணையா?" ராமச்சந்திரன் திகைத்தார். "பேச்சு வார்த்தை நடத்தலாம்" என்றார். "முடியாது. ஸ்டிரைக் நடந்தே தீரும்" என்றான் குப்புசாமி.

ஸ்டிரைக் நடந்தது. கல்யாணம் நடக்கவில்லை. பெண் உடுத்தியிருந்த புதுப் புடவையின் அழகு விற்ற ஏகாம்பரம் ஸ்டோர்ஸ் லேபிள் அப்படியே இருந்தது. அந்தக் கடையில் மூன்றாம் பேர்வழியாக இருந்து ஸ்டிரைக் பண்ணினவன் மாப்பிள்ளை குப்புசாமி. அந்தப் பெயர் கண்ணில் பட்டதும் குப்புசாமி தன்னை மறந்து கோஷமிட்டுவிட்டான். ராமசாமிக்கு இந்த விஷயம் தெரிந்தபோது கல்யாண ஏற்பாட்டை 'லாக் அவுட்' பண்ணிவிட்டார். குப்புசாமி பழக்க தோஷத்தால் வாயைத் திறந்ததால் இன்னும் பிரம்மச்சாரியாகவே இருக்கிறான்.

(மங்களம் பாடலோ!)

## பட்டுமாமா-சிட்டுமாமி!

"கண் டாக்டர் கிட்டே போறேன் போறேன்னு கிளம்புகிறீர்களே! அப்படி என்ன வந்துடுத்து?"



"அந்தக் கேள்வியை டெலிபோன் டைரக்டரிகிட்டே கேளு! 'ராங் நம்பர்'ன்னு மறு பக்கத்திலிருந்து சீறி விழுறாங்களே, அவங்களைக் கேளு! இரண்டும் இல்லேன்னு டெலிபோன் பில்கிட்டே கேளு!"



□ □ □ □ □ □ □ □ □ □ □

## கொறிக்கவும் சிரிக்கவும்

கோமதி சுவாமிநாதன்

## கலாட்டா நாயகி

சிவராத்திரி தினம். ஷிமோகா நகர நாடகப் பிரியர்கள் இரவு கண் விழித்து நாடகம் பார்த்துப் புண்ணியம் சேர்க்கத் தயாரானார்கள். நகரத்திலுள்ள இரண்டு நாடகக் கொட்டகைகளில், 'பீமப் பிரதிக்ஞை', 'சிவஜலந்தரா' என்னும் இரண்டு புண்ணிய புராண நாடகங்கள் நடக்கவிருப்பதாகச் சுவரொட்டிகள் அறிவித்தன.

ரசிகர்களுக்கும், ஏன், நாடகத் தயாரிப்பாளர்களுக்கும் கடைசிவரை தெரியாதிருந்த ரகசியம், பிரதான கதாநாயகி வேடம் தரிக்க ஒப்புக்கொண்டிருந்த நடிகையைப் பற்றியது. அந்த அம்மையார் ஒரே நேரத்தில் நடக்கும் இரண்டு நாடகங்களிலும் கதாநாயகி வேடம் ஏற்கச் சம்மதித்திருந்தார்.

'பீமப் பிரதிக்ஞை'யின் முதல் காட்சியில் நடித்துவிட்டு வேகமாகப் பின்பக்கம் நழுவி அடுத்த கொட்டகைக்குப் போய் 'சிவஜலந்தராவில்' நடித்தார். அங்கிருந்து நழுவிப் பீமப் பிரதிக்ஞைக்கு வந்தார்.

இந்த நேரத்தில் பீமப் பிரதிக்ஞையில் அவர் நடிக்க வேண்டிய 'காட்சி' நீடிக்கவே, சிவஜலந்தரா கொட்டகையில் நாடகம் முன்னேறாமல் தடைப்பட்டது. ரசிகர்கள் பொறுமை இழந்தார்கள். நாடகத் தயாரிப்பாளர்களுக்கும் 'பின் வழி நழுவல்' தெரிய வந்தது. உடனே அவர்கள் மறு கொட்டகைக்கு வந்து கலாட்டா செய்து கதாநாயகியைத் தங்கள் கொட்டகைக்கு அழைத்துச் சென்றார்கள். பீம அபிமானிகள் சும்மா இருப்பார்களா? அவர்கள் சிவஜலந்தரா மேடையை முற்றுகையிட்டார்கள்.

விஷயம் கலாட்டாவில் முடிந்து இரண்டு நாடகங்களும் தடைபட்டன! காவல்துறை கொடுக்கவில்லை என்றால்தான் நிறைய நடிகைக்குக் கெட்ட பெயர். காலால் நடந்து போய் ஒரே நேரத்தில் இரண்டு நாடகங்களில் நடிக்க முன்வந்ததாலும் கஷ்டமா?



## தலைப்பால் சுவைபெறும் நகராறு செய்திகள்

### அறிவுச் செய்தி

லக்னோ, பாட்னா, ஹைதராபாத், பங்களூர், திருவனந்தபுரம் ஆகிய ஐந்து நகரங்களில் உள்ள அமெரிக்கச் செய்தித் துறை வாசகசாலைகளை, ஒரு மாத நெடு அறிவிப்பை உபயோகப்படுத்திக் கொள்ளாமலேயோ, மூடிவிட அமெரிக்கத் தூதராலயம் முடிவு செய்துவிட்டது.



### அமைதிச் செய்தி

தாணாவிலும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் ஊரடங்குச் சட்டத்தை மீறுபவர்களைக் கண்டவுடன் சுட்டுத் தள்ள மகாராஷ்டிர அரசாங்கம் உத்தர விட்டிருக்கிறது.



### அன்புச் செய்தி

கல்கத்தாவில் சோவா பஜார் பகுதியில் ஆயுதங்களின் துணையுடன் பரஸ்பரம் உறவு கொண்டாடிய இரு கோஷ்டிகள் மீது போலீஸார் சுட்டனர்.

நான் இருந்த வீட்டின் பின்பகுதி, நான், கிழிய தாயார், மனைவி, மைத்துனிப் பெண், தம்பி, எனது குழந்தை ஆகிய அறுவரும் வசிப்பது. முன் பகுதியில் ஒரு ராவ் பெரிய குடும்பத்தோடு இருந்தார். அவருக்குப் பகல் முழுதும் உழைத்துக்கொண்டிருக்கும்படியாகத் தபால் கச்சேரியிலோ எங்கேயோ

## பாரதி கண்ட குடும்ப பராசக்தி

ஓர் உத்தியோகம். உடம்பிலே கோபி மண் முத்திரைகள் எத்தனையோ அத்தனை குழந்தைகள். அவர் மனைவி மறுபடியும் கர்ப்பம். முற்றத்திலேயே ஒரு பசுமாடு. இத்துடன் ஒட்டுக் குடியாக அவருடைய பந்துக்கள் சிலர் வசித்தார்கள்.

- ஞானரதத்திலிருந்து ஒரு பகுதி

## சென்னை நகர பஸ் ஸ்டாப்புகளில் தேவைப்படும் சில அறிவிப்புகள்

1. பஸ்கள் இங்கிருந்து சுமார் நூறு கஜங்கள் வரை தள்ளி நிற்கலாம். எப்போதுமே ஓடத் தயாராக இருங்கள்.
2. நீங்கள் ஏறிச் செல்லவேண்டிய பஸ் இங்கு நிற்க வேண்டும் என்று கட்டாயம் ஒன்றும் இல்லை. ஆனால் உங்களுக்கு அதிர்ஷ்டம் கட்டாயம் இருந்தாக வேண்டும்.

## அடியும் முடியும் தெரியாமல் அமர்வோனே!

பலபேருக்கு மேடையில் ஏறி மைக் முன்நின்று எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்றே தெரியறில்லே. முன்னாலேயும் பக்கத்திலேயும் உட்கார்ந்திருப்பவர்களைப் பார்த்து, 'ராமசாமி அவர்களே, இருள்சாமி அவர்களே, கோவிந்தசாமி அவர்களே'ன்னு நிதானமா ஐந்து நிமிடங்கள் நாமாவளி அர்ச்சனை செய்யறாங்க. இந்தநேரத்தில் தான் பேசவேண்டிய விஷயங்களையே மனதிலே ஒழுங்குபடுத்த ஆரம்பிக்கிறாங்களோ என்ற சந்தேகம் கேட்பவர்களுக்குத் தோன்றுகிறது.



இன்னும் பலபேருக்குத் தங்கள் பேச்சைச் சரியாக முடிக்கத் தெரியாது. 'ஆகவே' என்பார் பேச்சாளர். 'அப்பாடா'ன்னு ஒரு நிம்மதி கேட்கிறவங்களுக்கு ஏற்படும். ஆனால் அப்போதுதான் பேச்சாளருக்குத் தான் சொல்ல மறந்துபோன விஷயம் ஒன்று நினைவுக்கு வரும். மறுபடியும் ஆரம்ப காலக் குரலிலேயே பேச ஆரம்பிப்பார். இப்படிப் பல ஆகவேக்களுக்கு வந்து திரும்பிப் போய்விடுவார். விமான நிலையங்களில் இறங்குவதற்கு இடமில்லாமல் மேலேயே வட்டமிடும் விமானங்களை இவர்கள் நினைவூட்டுவார்கள். -ஓர் அனுபவமிக்கக்கேட்பாளர்

CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும்
அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ

ப்ரூக் பாண்ட்
நிபுணர்களால் பக்குவம்
செய்யப்பட்டிருப்பதே
அது சிறந்து
விளங்கக்காரணம்




* க்ரஷ், டியர், கர்ல் —
இந்த தனிப்பட்ட டீ
தயாரிக்கும் முறையானது
விரைவில் கரையவும், மிகுந்த
தேயிலைச்சத்துக்கிடைக்கவும்
உறுதியளிக்கிறது.



# நமக்கென்ன?

"டேய் சுந்தரம்! இந்தக் கடிதத்தைப் பார். போன வாரம் வந்துட்டுப் போனாங்களே, மாப்பிள்ளைப் பையன்: அவன் எழுதியிருக்கான்" என்று ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாகக் கடிதத்தை நீட்டினாள் மீனாட்சி.

சுந்தரம் தலைநிமிர்ந்து அம்மா முகத்தைப் பார்க்கவே யில்லை. அவனுக்குத் தெரியும், அம்மா ரொம்பக் கோபமாயிருக்கிறாள் என்று. எப்போதும் 'சுந்து' என்று அழைக்கும் தாயார் 'சுந்தரம்' என்று கூப்பிட்டால் அவன்மேல் கடுகடுப்பாய் இருக்கிறாள் என்பதும், 'டேய்' போட்டு அழைத்தால் ரொம்பக் கோபமாயிருக்கிறாள் என்பதும் - அவனுக்கு நன்றாகத் தெரிந்த பாடம்.

கடிதத்தை வாங்கிப் படித்துப் பார்க்காமல் மேஜையின் மேல் எறிந்துவிட்டு, சட்டையைக் கூடக் கழற்றாமல் அப்படியே ஈஸிச்சேரில் கவலையோடு சாய்ந்தான்.

உள்ளேயிருந்து காப்பி டம்ளரோடு வந்த லாவண்யா, டம்ளரை அவன் முன்னால், டீபாயில் வைத்தாள். அவளை நிமிர்ந்து பார்த்த சுந்தரம், சட்டென்று கீழே குனிந்து கொண்டான்.

"டேய், அந்தக் கடிதத்தைப் படிச்சுப் பாருடா, என்ன எழுதியிருக்கான்கன்னு" – மீனாட்சி பொரிந்து கொண்டே அறை நிலைப்படியிலேயே உட்கார்ந்து விட்டாள். அவள் கை தானாகவே தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டது. தாங்கக் கூடிய சோகமா அது?

"முதல்லே காப்பியைச் சாப்பிடுங்கண்ணா, ஆறிப் போகுது. அப்புறம் படிக்கலாம்" என்று லாவண்யா பரிவுடன் காப்பி டம்ளரை எடுத்து அவன் கையில் வைத்தாள்.

"நல்ல தங்கை – அண்ணனுக்கேத்தவ...!" என்று மெதுவாக – சம்பந்தப்பட்டவர்களுக்குக் கேட்டாலென்ன, கேட்காவிட்டாலென்ன என்ற பாவனையில். முனகினாள் மீனாட்சி.

சுந்தரம் காப்பியை உறிஞ்சிக்குடித்தான். கண்கள் கடிதத்தை ஏறிட்டும் பார்க்கவில்லை. அம்மா கோபப்படும்படியாக அதிலே என்ன எழுதியிருக்கும் என்று அவனுக்குப் படித்துப் பார்க்காமலே தெரியும்.

காலி டம்ளரை மேஜையில் வைக்கப் போகும்போது லாவண்யா கை நீட்டி அதை வாங்கிக் கொண்டாள். அப்பொழுது சுந்தரம் நிமிர்ந்து அவளுடைய முகத்தைக் கவனித்தான்.

அவளுக்கும் வருத்தம் இருக்கத்தான் செய்யும். என்றாலும் படித்தவள் இல்லையா? அதனால் நாகரிகமாகத் தன் வருத்தத்தையும் ஏமாற்றத்தையும் மறைத்துக் கொண்டிருக்கிறாள். ஆனால் அம்மாவோ மனத்தில் நினைப்பதற்கு அப்படியே முகத்திலும் பேச்சிலும் உணர்ச்சி வடிவம் கொடுத்து விடுகிறாள்!

அப்படி யொன்றும் பிரமாதமான வரன் இல்லைதான். ஏதோ ஒரு பிரைவேட் கம்பெனியில் இருநூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற பையன்தான். இருந்தாலும் பல ஆண்டுகளாக வெவ்வேறான பிரச்னைகளால் குதிராமல் தள்ளிக் கொண்டே போகும் லாவண்யாவின் கல்யாணம் இந்த



முறையாவது குதிர்ந்துவிடும் என்றுதான் எல்லோரும் நினைத்தார்கள். மாப்பிள்ளை வீட்டார் கேட்ட லௌகிக விஷயங்களும், சுந்தரத்துக்குக் கட்டுப்படியாகக் கூடியதாகத்தான் இருந்தது. எப்படியோ கடனை உடனை வாங்கி மகள் கல்யாணத்தை ஒட்டிவிட்டால் அப்புறம் பையனுக்குக் கவலையில்லை என்று மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தாள் மீனாட்சி.

"ஏதோ நம்ம ஏழைமைக்குத் தோதாக ஒரு வரன் அமைஞ்சிருக்கேன்னு சந்தோஷப் பட்டேன். ஆனால் அதையும் கெடுத்திட்டியேடா" என்று ஒப்பாரி வைத்தாள் மீனாட்சி.

'சரி, கடிதத்தைத்தான் படிப்போமே' என்று எடுத்துப் படித்தான் சுந்தரம். சரிதான்; ஒன்றும் எதிர்பாராதது இல்லை; ஆனால் எதிர்பார்த்ததுதான். ஆனால் மாப்பிள்

அய்க்கண்

லைப் பையன் கொஞ்சம் காரமாகவே எழுதியிருந்தான். ஏன் எழுத மாட்டான்? மாப்பிள்ளையாயிற்றே? மாப்பிள்ளை என்று சொல்லி ஒரு துரும்பைக் கிள்ளிப் போட்டாலும் அது தூணுமாமே?

''படிச்சவங்களா, எவ்வளவு 'அர்ரகன்ட்'டா எழுதியிருக்காங்கண்ணே? மரியாதை தெரியாத பட்டிக்காட்டான்னு கூசாமெ எழுதியிருக்காங்களே. உங்களுக்குக் கோபம் வரலியா அண்ணே?'' என்று [illegible] மாலன்மா. மாப்பிள்ளை எப்படிப்பட்ட சொம்பனாக இருந்தால் என்ன, அவனுடைய செல்ல அண்ணனைப் 'பட்டிக் காட்டான்' என்று சொல்ல அவனுக்கு என்ன திமிர்?

சுந்தரத்துக்கு உண்மையிலேயே கோபம் வரவில்லைதான். அவனுடைய சுபாவம் அப்படி. தன்னைப் பற்றிப் பிறர் எவ்வளவு




வைதாலும் சிரித்துக்கொண்டே போய்விடுவான். ஆனால் —

''ஏண்டா இப்படி எழுதியிருக்காங்க? நீ ஏதுவாச்சும் செய்தியா?... மரியாதை தெரியாதவன்னு எழுதியிருக்காங்களே. நீ என்ன செய்தே?''

''ஏம்மா என்னைப் போட்டுத் துளைக்கிறே? நான் என்ன செஞ்சேன் என்கிறது தெரிஞ்சு என்ன பிரயோசனம்? நான் செஞ்சதுக்குப் பலன்தான் இதோ இந்தக் கடிதாசாக வந்துடுச்சே!.... அப்புறம் திருப்பித் திருப்பி என்னை ஏன்....? என் குணம் உனக்குத் தெரியாதாம்மா?''

கட்டையைக் கழற்றிவிட்டு அப்படியே மல்லாந்து படுத்தான் சுந்தரம்.

அவன் குணம் தெரிந்ததுதானே?

சிறு வயதிலேயிருந்து அப்படி ஒரு குணம் அவனுக்கு. தன்னை யார் என்ன சொன்னாலும் எப்படி நடத்தினாலும் பொறுத்துக் கொள்வான். ஆனால் தன் எதிரில் யாராவது ஏழை எளியவர்களை, மெலியவர்களை, அப்பாவிகளை அநியாயமாக நடத்தினால் அவன் பொறுத்துக் கொள்ள மாட்டான். அவர்களுக்காகப் பரிந்து பேசி எதிர்ப்பான். அவன் கண் முன்னால் ஏதாவது அநீதி நடந்தால் அது யாரானாலும் சரி, அதை எதிர்த்துச் சண்டை போடுவான்.

ஒரு நாள் — அவன் பத்தாவது வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோது, கணக்கு ஆசிரியர் — மாணிக்கம் ஐயர் பாடம் நடத்திக் கொண்டிருந்தார். 'பீரியடு' தொடங்கிச் சில நிமிஷங்களாகி விட்டன. அப்போது 'லேட்'டாக வந்து கொண்டிருந்த சோலையன் மெதுவாக, ஆடி அசைந்து அடிமேலடி வைத்து நடந்து வந்தான். இதைக் கவனித்த மாணிக்கம் ஐயர் சோலையனைக் கண்டபடி திட்டினார்.

''லேட்டாக வர்றோம் என்ற நினைப்பே இல்லாமல் என்னமோ பெரிய மகாராஜா போல ஆடி அசைஞ்சுகிட்டு வர்றியே, என்ன திமிர், ராஸ்கல்! வீட்டுக்கே போ. வகுப்புக்குள்ளே விட மாட்டேன்'' என்று சீறி அவனை விரட்டியடித்தார்.

மாணிக்க ஐயர் என்றாலே எல்லா மாணவர்களுக்கும் சிம்ம சொப்பனம்; அவர் அவ்வளவு கண்டிப்பானவர். அவர் பேச்சுக்கு எதிர்ப் பேச்சுப் பேசினால் தண்டனை இரட்டிப்பாகிவிடும் என்று எல்லோருக்கும் தெரியும். அதனால் எல்லாப் பையன்களும் சோலையனைப் பற்றிய உண்மையைச் சொல்லாமல் வாயை மூடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் என்ன சோலையன்கூட அவருக்குப் பயந்து உண்மையைச் சொல்லாமல் அழுதுகொண்டே வெளியில் நின்றான்.

அப்பொழுது நிமிரென்று எழுந்தான் சுந்தரம்.

''ஸார்! சோலையனால் வேகமாக நடக்க முடியாது ஸார். அவன் தொடையில் ஒரு பெரிய கட்டி புறப்பட்டு மருந்து கட்டிக் கிட்டிருக்கான் ஸார்... அவன் இவ்வளவு வேகமாக நடந்து வந்ததே உங்களுக்காகத் தான் ஸார்!''

உடனே எல்லாப் பையன்களும் ஆட்டு மந்தை போல் தலையை ஆட்டினார்கள். 'ஆமா, ஸார்...'', ''ஆமா ஸார்!''

மாணிக்க ஐயருக்குச் சுரீர் என்றது. அவர் கண்களும் கலங்கிவிட்டன.

''அப்படியா? ஐ ஆம் வெரி ஸாரி, சோலையா! எக்ஸ்க்யூஸ் மீ... நீ சொல்லியிருக்கக்கூடாதா?... சரி, உள்ளே வா... மெதுவாக — டேய் சுந்தரம்! நீதான் மாணவ ரத்தினம்: யூ ஆர் ஏ ஜெம் ஆமங்க் ஸ்டூடண்ட்ஸ்...உன்னை என் மாணவனாகப் பெற்றதுக்காக நான் ரொம்பப் பெருமைப்படறேன்'' என்று அவனுடைய முதுகில் தட்டிக் கொடுத்தார் ஆசிரியர்.

இது போல் எத்தனையோ சம்பவங்கள்....

ஆனால் இதுபோல் எல்லாமே பாராட்டாக முடிந்துவிடவில்லை. பெரும்பாலானவை கசப்பான அனுபவங்களாகவே முடிந்தன.

சிறு நிலையில் உள்ள வேலைக்காரர்களை மேலதிகாரிகள் அநாவசியமாகத் திட்டிய போதும், காரணமில்லாமல் தண்டித்த

போதும் அவர்களுக்காகச் சுந்தரம் பரிந்து பேசியதற்காகப் பல இடங்களில் வேலையை இழந்திருக்கிறான். எளியவர்களுக்காகப் பரிந்து பேசும்போது பாராட்டி முதலில் தட்டிக் கொடுத்து ஊக்குவிக்கும் 'மாணிக்க ஐயர்கள்' எத்தனை பேர் இந்த உலகத்தில்? 'டிஸ்ஒபீடியன்ஸ்', 'இன்சபார்டினேஷன்' என்ற பழி சுமத்திக் காலை வாரிவிட்டுக் கவிழ்த்தவர்கள் தான் உலகத்தில் அதிகமாக இருக்கிறார்கள், இல்லையா?

''ஏனண்ணா, அப்படி என்னதான் நடந்தது? உங்களை ஏன் பட்டிக்காட்டான்னு திட்டியிருக்காங்க?'' என்று கேட்டாள் லாவண்யா.

''நான் பட்டிக்காட்டான்தான் லாவண்யா! ஏன்னா, பல படிச்ச நாகரிக மனிதர்கள் செய்யாததை நான் செய்தேன். அதனாலே நான் பட்டிக்காட்டான்தானே?'' என்று சிரித்தான் சுந்தரம்.

அன்று — லாவண்யாவைப் பெண் பார்த்துவிட்டுப் போன இரண்டாம் நாள் — வழக்கம் போல் பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தான் சுந்தரம். வழக்கம்போல் ஸ்டாப்பில் நிறையக் கூட்டம்; ஆபீசுக்குப் போகும் ஆண்களும் பெண்களும் வரிசையாக நின்றுகொண்டிருந்தார்கள்.

அந்த வரிசையிலே ஓர் இளம் பெண்— கையில் ஏதோ ஒன்றிரண்டு புத்தகங்களை ஸ்டைலாக மார்போடு அணைத்துக் கொண்டவாறு நின்று கொண்டிருந்தாள். கல்லூரி மாணவியாக இருக்கலாம். அவளுக்குப் பின்னால் நாலைந்து வாலிபர்கள் — டைட்ஸ் பாண்டும், 007 ஸ்லாக்கும், கூலிங் கிளாஸும் ஒரே சிரிப்பும் கேலியுமாக, அந்தப் பெண்ணைச் சுற்றிக் கிண்டல் செய்து கொண்டிருந்தார்கள். ஏதேதோ ஆபாசமான சினிமாப் பாட்டுக்களைப் பாடி அவளைக் கேலி செய்து கொண்டிருந்தார்கள். பாவம், அந்தப் பெண் முகமெல்லாம் கோபத்தாலும் அவமானத்தாலும் குங்குமமாய்ச் சிவந்திருந்தது. அத்தனை பெரிய கூட்டத்தில் அழகியாய் இருந்த ஒரே காரணத்தால் பேசவும் முடியாமல் விலகவும் முடியாமல் தணல் மேல் நிற்பது போல் நின்று கொண்டிருந்தாள்.

சுற்றியிருந்த கூட்டத்தில் யாருமே—ஆணோ பெண்ணோ — அவளுக்காகப் பரிந்து பேசி, அந்த வாலிபர்களைக் கண்டிக்க முன்வரவில்லை. நியூஸ் பேப்பர் வாங்கிப் படிப்பவர்களும், ஏதோ நாவல்களைப் படிப்பவர்களும், படிப்பதாகப் பாவனை செய்பவர்களும், பஸ் வரும் வழிமேல் விழி வைத்துக் கொண்டிருப்பவர்களும், போக்கு வரத்து இலாகாவைத் திட்டிக் கொண்டிருப்பவர்களும், அரசியல் விஷயங்களை அலசி ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பவர்களும்.... இத்தியாதி.... இத்தியாதி மனிதர்கள் இருந்த அந்தக் கூட்டத்தில் அந்தப் பெண்ணுடைய உதவிக்கு யாருமே வரவில்லை. அவரவர் வேலை அவரவர்களுக்கு; அவரவர் பிரச்னை அவரவர்களுக்கு. இந்த நிலையில் அந்தப் பெண்ணுக்கு உதவி செய்ய அந்தக் கூட்டத்தில் யாருக்கும் மனம் இல்லை; மனம் இருந்த சிலருக்கு அந்த 'ரோட்சைட் ரோமியோக்களை' எதிர்த்துப் பேசும் துணிவில்லை.

கடைசியில்....

சுந்தரம் பொங்கி எழுந்தான். ''மிஸ்டர்! அநாவசியமாய் ஏன் அந்தப் பெண்ணைச் சீண்டுறீங்க? உங்க வேலையைப் பாருங்கப்பா'' என்றான் அவன்.

உடனே அந்த இளைஞர் படை முறைத்துப் பார்த்தது. அங்கே, ஒரு வாலிபனுடைய முகம் எங்கோ பார்த்தது போலிருந்தது. எங்கே பார்த்தோம்? யார் இந்த — ஓ! இவன், லாவண்யாவைப் பெண் பார்க்க வந்தானே, மாப்பிள்ளை; அவனுடைய தம்பியல்லவா?

''ஏய் இடியட்! உன்னுடைய வேலையைப் பாருடா... கன்ட்ரி ப்ரூட்...'' என்று யாரோ ஒருவன் சொல்லி முடிப்பதற்குள் அவனுடைய கடைவாயில் ஒரு குத்து விழுந்து தெறித்தது.

''ஐயோ!'' என்று கீழே விழுந்து உருண்டான் அந்த இளைஞன்.

எதிரே கையை மடக்கிக் கொண்டு யுத்த சன்னத்தனாய் நின்றான் சுந்தரம். அடிவாங்கியவனும் மாப்பிள்ளையின் தம்பியும் திருப்பித் தாக்கினார்கள். சண்டை தொடங்கிவிட்டது.



மற்ற ரோமியோக்கள் எல்லாம் கல் கண்ட காக்காய் போல் பறந்தோடி விட்டார்கள்!

சுந்தரம் ஒருவனே இருவரையும் 'பிய் பிய்' என்று பிய்த்தெறிந்து விட்டான். இதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த கூட்டம் அந்தச் சமயத்தில் வந்த பஸ்ஸில் தொத்திக் கொண்டு மறைந்தது. அவர்களுக்கு என்ன? யாரோ எவரோ சண்டை போட்டுக்கொண்டால், கோர்ட்டுக்குச் சாட்சி சொல்லப் போக வேண்டுமே! அந்தப் பயத்தில் மீதியிருந்த கூட்டமும் கரைந்துவிட்டது.

திடீரென்று ஆபத்பாந்தவனாய் அங்கே வந்தார் ஒரு கான்ஸ்டபிள். அவர் சண்டையை விலக்கி விட்டு, சுந்தரத்தையும் இரண்டு இளைஞர்களையும் அந்தப் பெண்ணையும் அழைத்துக் கொண்டு ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார்.

இந்த விஷயத்தை இதுவரை தாயாரிடமும் தங்கையிடமும் கூறவேயில்லை. ஆனால் அன்றே அவனுக்குத் தெரிந்து விட்டது: தம்பியைப் போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்பில் தள்ளிய தன் வீட்டில் அந்த மாப்பிள்ளைப் பையன் சம்பந்தம் செய்து கொள்ள

'மாட்டான்; லாவண்யாவுக்கு இந்த வரனும் அவுட்'தான்!

''ஏண்டா, அந்தக் கூட்டத்திலே அத்தனை பேர் இருந்தாங்களே, அவங்க மாதிரி நீயும் சும்மா இருந்திருந்தால் இப்படி நிலைமை வந்திருக்குமா? உன்னோட பிரதாபங்களைச் செய்கைக்காக மெடல் கொடுக்கப் போறாங்களா? இந்த உலகத்திலே இருக்கிற அநியாயத்தை யெல்லாம் சம்ஹாரம் பண்ணுவதற்காக நீ அவதாரம் செய்திருக்கிறதாக நினைச்சுக்கிட்டிருக்கியா? நீ ஒருத்தன்தான் ஊரிலே இருக்கிற அதர்மத்தை யெல்லாம் ஒழிக்கப் போறியாக்கும்? நமக்கென்னன்னு நினைச்சு, நம் வேலையைப் பார்த்துக்கிட்டுப் போக வேண்டியதுதானே?'' என்று மீனாட்சி பொருமினாள். ஒரே மகள் கல்யாணமும் குதிராமல் தள்ளிக் கொண்டே போகிறதே என்ற கவலை — நெருப்பை அடிவயிற்றில் கட்டிக்கொண்டிருக்கிற நமைச்சல்—அவளை உலுக்கி எடுத்தது.

''அதெப்படி அம்மா, நம்ம கண் முன்னால் ஒரு பொண்ணு அவமானப்படறதைப் பார்த்துக்கிட்டுச் சும்மா இருக்க முடியுமா, அம்மா? அந்தப்பொண்ணும் நம்ம லாவண்யாவைப் போல் ஒரு சகோதரிதானேம்மா! என் தங்கை அப்படிப்பட்ட நிலைமையில் இருந்தால் எப்படி இருக்கும்னு நினைச்சுப் பாரம்மா.''

''ஆமாமா, ஊரிலே உலகத்திலே இருக்கிற உன் சகோதரிகளுக்கெல்லாம் கல்யாணமாகட்டும்; உன் கூடப் பிறந்த சகோதரி மட்டும் கல்யாணமாகாமல் குதிராட்டம் வீட்டுக்குள்ளே இருக்கட்டும்.''

அம்மாவின் சொல்லம்பு வசமாக அவனுடைய நெஞ்சில் தைத்தது. நெஞ்சவேதனை தாளாமல் குனிந்து கொண்டான் சுந்தரம்.

வாசலில் டாக்ஸி வந்து நிற்கும் சத்தம் கேட்டது. எல்லோரும் வாசலை எட்டிப் பார்த்தார்கள்.

ஒரு வாலிபனும் இளம் பெண்ணும் டாக்ஸியிலிருந்து இறங்கி உள்ளே வந்தார்கள். அந்தப் பெண்—

அன்று பஸ் ஸ்டாப்பில் நின்ற பெண்தான்.

''வணக்கம் ஸார்! நான்தான் இந்தப் பெண்—லதாவின் அண்ணன் மோகன். காலேஜில் அஸிஸ்டெண்ட் புரொபஸராயிருக்கேன். உங்களைப் பத்தி லதா நிறையச் சொன்னாள். போலீஸ் ஸ்டேஷனில் நீங்கள் கூறிய தகவலை வைத்து உங்களைப் பற்றி உங்கள் ஆபீஸிலும் வேறு இடங்களிலும் விசாரித்தோம். அதனால்தான் உடனே வந்து உங்களுக்கு நன்றி சொல்ல நேரமில்லை. இப்போது ஒரு முக்கியமான காரியமாகவும் இங்கே வந்தோம். உங்களைப் போல ஊருக்கு ஒருத்தர் இருந்தாலும் போதுமே? சமுதாயத்தின் குறைபாடுகளை யெல்லாம் திருத்திவிடலாம். 'நல்லவர்கள் நமக்கென்ன என்று ஒதுங்கி விருப்பதனால்தான் நாடே நரகமாகிவிட்டது' என்றார் அறிஞர் ஜாம்பி. நல்லவர்கள் பொறுப்போடு ஆங்காங்கே தவறுகளைக் கண்டிக்க ஆரம்பித்து விட்டால், இந்த நாட்டிலே ஆயிரக்கணக்கான போலீஸாரும், நூற்றுக் கணக்கான கோர்ட்டுகளும் தேவையே யில்லை. போலீசும் சட்டமும் குற்றவாளிகளைத் தண்டிக்கத்தான் செய்யும். நல்லவர்கள்தான் அவர்களைத் திருத்த முடியும்'' — அந்த இளைஞன் தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டு பெரிய சொற்பொழிவே செய்து விட்டான்! கல்லூரிப் பேராசிரியரல்லவா?

''உங்கள் குடும்பத்தைப் பற்றி விசாரித்த போது, உங்கள் தங்கைக்குச் சமீபத்தில் கல்யாணம் நடக்கப் போவதாகக் கேள்விப்பட்டேன். அதை அடுத்து—''

மோகன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். மீனாட்சி மறுபடியும் முணுமுணுக்க ஆரம்பித்தாள். நீறு பூத்திருந்த அக நெருப்பு மீண்டும் தணல் தெறித்தது.

''ஊருக்கு நல்லவன்னு பெயரெடுத்துட்டானே என் மகன்? அது போதும் எங்களுக்கு. தங்கைக்குக் கல்யாணம் நின்னு போயிட்டா என்ன, போயிட்டுப் போறது!...''

மோகன் திகைத்தான். ''அம்மா என்ன சொல்றாங்க?'' என்றவாறு சுந்தரத்தைப் பார்த்தான்.

சுந்தரம் சுருக்கமாக நடந்ததைச் சொன்னான். உடனே மோகன் சிரித்தான்.

''அப்படியா?...ஏய் லதா, இப்படி உட்கார்'' என்று சொல்லிவிட்டு, தானும் இப்படி உட்கார்ந்தான். அப்பொழுதுதான் அதுவரை வந்தவர்களை உட்காரக்கூடச் சொல்லாமல் பேசிக் கொண்டிருந்திருக்கிறோம் என்பதை உணர்ந்து சுந்தரம் வருத்தப்பட்டான்.

''மிஸ்டர் சுந்தரம்! நான் ராமகிருஷ்ணா கல்லூரியில் தமிழ் அஸிஸ்டெண்ட் புரொபஸராயிருக்கிறேன். சம்பளம் நானூற்று ஐம்பது ரூபாய். தாய் தகப்பனார் காலமாகி விட்டார்கள். எனக்கு ஒரே சகோதரி இந்த லதாதான். குடும்பத்தில் வேறு பிக்கல் பிடுங்கல் கிடையாது. உங்களுக்குச் சம்மதமென்றால், இப்பவே நீங்க கொடுக்கிற சொஜ்ஜி, பஜ்ஜி, காப்பியைச் சாப்பிட்டுட்டு உங்க தங்கையைக் கல்யாணம் செய்துக்கச் சம்மதம்னு சொல்லிடறேன். வரதட்சிணை, சீர் எதுவும் கேட்கலே. ஆனால் ஒரு கண்டிஷன்....'' என்று நிறுத்திவிட்டுத் தன் தங்கையைப் பார்த்தான். அண்ணனுடைய குறிப்பை உணர்ந்த லதாவின் முகம் செந்தாமரையாய்க் கனிந்து மலர்ந்து குனிந்தது.

''நீங்களும் ஒரு நாள் எங்க வீட்டுக்கு வந்து, என் தங்கை பண்ணுகிற டிபனையெல்லாம் பொறுமையாய்ச் சாப்பிட்டுட்டு, பாட்டுப் பாடச் சொல்லிக் கேட்டுட்டு, பெண் பிடிச்சிருக்குன்னு சொல்லணும். இதோ இவளுடைய ஜாதகத்தையும் கொண்டாந்திருக்கேன். அதுக்காகத்தான் நான் இத்தனை நாட்கள் கழித்து உங்களைப் பார்க்க வந்தேன். எங்க குடும்பத்திலே நான்தான் பெரியவன். வேறு வழக்கமான 'பார்மாலிடி'களெல்லாம் எனக்குத் தெரியாது. நான் பேசுறதிலே ஏதாவது தப்பு இருந்தால் மன்னிக்கணும்.. என் தங்கைக்கு வரன் பார்க்கத்தான்... ஆனால் கடவுள் புண்ணியத்திலே எனக்கும் உங்க வீட்டிலே பெண் கிடைச்சிட்டால் இரட்டை மகிழ்ச்சி; எம்.எல்.ஏ. ஆகி, மந்திரியும் ஆனதுமாதிரி'' என்றான் மோகன்.

மீனாட்சிக்குக் கூட இரட்டைச் சந்தோஷம்தான். இவ்வளவு பண்புள்ள மருமகனையும் அழகான மருமகளையும் ஒரே சமயத்தில் அடையக் கொடுத்துவைத்திருக்க வேண்டுமே!


MINERVA

குட்டிக் கதை

# அநுபவம் புதுமை

மத்தியானச் சமையலை முடித்து விட்டுக் கணவ னின் வருகையைத் 'திக் திக்' என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் லலிதா.

காரணம் --

அன்று சதிவைப் போல் காய்கறிக்காரி தெருவில் வரவில்லை. அவளே போய் வாங்கி வரலாம் என்றாலோ அவளுக்கு ஊர் புதிது! திருமணமாகித் தனிக் குடித்தனம் வைத்து இரண்டு மாதங்கள் ஆகி விட்டதே தவிர அவளுக்கு எந்தக் கடை எந்தப் பக்கம் இருக்கிறது என்றுகூடத் தெரியாது!

அதனால் --

அன்றையச் சமையலில் வெறும் வற்றல் குழம்பும், சுட்ட அப்பளமுமாக ஏற்றி வைத்து விட்டாள் அவள்! அந்தச் சமையல் அவள் கணவருக்குப் பிடிக்குமா பிடிக்காதா என்பதுதான் அவளுக்குப் பெரிய பிரச்னையாக இருந்தது. வற்றல் குழம்பு அவருக்குப் பிடிக்காததாக இருந்துவிட்டால்.... அவர் வழங்கப் போகும் வசவுச் சொற்களை வாங்கிக் கொள்ளத்தான் வேண்டும் இன்றைக்கு!

"டக்....டக்...!"

அதோ! அவரும் வந்து விட்டாரே! பாவம்! நல்ல பசியோ என்னவோ, வந்ததும் வராததுமாகச் சட்டையைக் கழற்றிக் கொண்டே கேட்டார்.

"இன்னிக்கு என்ன சமைச்சிருக்கே லலிதா?"

தயங்கித் தயங்கிப் பதில் வந்தது அவளிட மிருந்து.

"வந்து.... இன்று காய்கறிக்காரி வரவில்லே! அதனால் வெறும் மணத்தக்காளி வற்றல் குழம்பு."

அவள் எதிர்பார்த்ததற்கு மாறாக அவருடைய முகம் திடீர் என்று எப்படி மலருகிறது? ஒரு வேளை தினமும் பருப்பு சாம்பார் சாப்பாடு அவருக்கே அலுத்து விட்டது போலிருக்கிறது. தேவலையே!

"பலே! அப்புறம் தொட்டுக்க என்ன செய்தே?" என்று கேட்டார்.

ஆவலோடு அவர் அடுத்துக் கேட்டதும் உற்சாக மும் சுறுசுறுப்பும் வந்துவிட்டது அவளுக்கு!

"சுட்ட அப்பளமும், தயிர்ப் பச்சடியும்தான்!"

அவருடைய முகம் மகிழ்ச்சியாலும் ஆச்சரியத் தாலும் எப்படிப் பூரிக்கிறது! தெரியாத்தனமாகச் செய்து விட்டாலும் இந்தச் சமையல் அவருக்கு மிகவும் பிடித்தமானது போலிருக்கிறதே! இது இத்தனை நாட்கள் அவளுக்குத் தெரியாது போய் விட்டதே!

"பேஷ்! பேஷ்! நினைத்துக் கொண்டே வந்தேன்! அதே சமையலைச் செய்து இருக்கி றயே! உனக்கு ஜோசியம் தெரியுமா லலிதா?" என்று அவர் உற்சாகமாகப் புகழ்ந்ததும் அவளுக்குத் தலைகாலே புரியவில்லை.

"சரி! சரி! நேரமாகிறது. சாப்பிட வாங்க!" என்று அழைத்தாள் சகதர்மிணி.

"இல்லே, லலிதா! வர வழியிலே ஒரு சிநேகிதன் ரொம்ப நாளைக்கப்புறம் பார்த்த சந் தோஷத்திலே ஹோட்டலுக்கு அழைச்சுக்கிட்டுப்போய் விருந்தே வைத்து விட்டான்! தட்ட முடியல்லே! சாப்பிட்டுவிட்டேன்! இங்கே நீ வேறே எனக்குப் பிடித்தமானதாக எதையாவது செய்து வெச்சிட்டு 'வேஸ்ட்டா' போயிடக் கூடாதே, எதையாவது 'சிம்பிளா' செய்திருக்கணுமேன்னு நினைச்சுக்கிட்டே வந்தேன்! அதே போல் செய்திருக்கே நீ! நேர மாகிறதே! நீ போய்ச் சாப்பிடு லலிதா! உனக்குப் பசிக்கும்!" என்றார் கணவர்.

- ரமணி ரங்கநாதன்

## ஜப்பானியக் காதலர்களுக்கு இந்தியத் திருமணம்

ஜப்பானியரிருவர் இந்தியாவுக்கு வந்து இந்து முறைப்படி திருமணம் செய்து கொண்டனர். புதுதில்லி பிர்லாமந்திரில் நடந்தது கல்யாணம்.

மணமகள்: நாரிகோ டாகே; மணமகன்: ஷோந்த உட்சுவா. இருவரும் காதலித்துத் திருமணம் புரிந்துகொண்டனர்.

ஜப்பானிய நாட்டு உடை வழக்கங்களை மேற் கொள்ளாமல், இந்திய நாட்டு உடையலங்காரத் துடன் மணமேடைக்கு வந்தனர்.

"ஜப்பானிலிருந்து இந்தியாவுக்கு வந்து தானா மணம் செய்துகொள்ள வேண்டும்?"

"அப்படி ஒரு விநோத ஆசை. மேலும் ஒரு நியாயமான காரணம் உண்டு. இந்தியாவில் திருமணச் செலவும் குறைவாயிருக்கிறது!...."

நாரிகோ ஷோந்த உட்சுவா போன்றே இந்தியாவில் திருமணம் செய்து கொள்ளப் பத்து ஜப்பானியக் காதல் ஜோடிகள் ஆவலுடன் காத்திருக்கிறார்களாம்!

"யாத்ரீ"யிலிருந்து ஏ. சுவாமிநாதன்

மேல வீதி காமாட்சி அம்மன் கோவில் வாசலில் கால் கடுக்க நின்று கொண்டிருந்த அச்சுதராமனுக்கு, மல்லாரி ராவைப் பற்றி ஏதேனும் தெரிந்து கொள்ளலாம் என்ற நம்பிக்கை அநேகமாய் மழுங்கி விட்டது. அறுபது எழுபது வயதான பெரியவர்களிடமெல்லாம் 'மல்லாரி ராவ் என்று ஒரு பெரியவர்—பெரிய சங்கீதக்காரர் — பஜனைகள்கூடச் செய்வாரே! அவருடைய குடும்பத்தினர் எங்கே இருக்கிறார்கள் என்று சொல்ல முடியுமா?' என்று அலுப்புச் சலிப்பில்லாமல் கேட்டதற்கு, ஒரே மாதிரியான விடைகள்தான் கிடைத்தன. 'தெரியாதே...'

அச்சுதராமனின் நெஞ்சக் குழலுக்குள் ஏமாற்றம் மெல்ல இறங்கிற்று. அத்துடன், தன் முயற்சி தோற்றுப் போனதில், தன்னிடமே ஒருவித வெறுப்பு.

டில்லியிலிருந்து புறப்பட்டபோது அவர் நம்பிக்கை, இமாலயம் அளவுக்கு விரிந்திருந்தது. ஆனால், தஞ்சாவூரின் முக்கிய வீதியில் விசாரித்தும்கூட மல்லாரி ராவின் குடும்பத்தினரைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியவில்லையே?

அவருடைய குருநாதர் என வணங்கத்தக்க மல்லாரி ராவ் காலமாகி எத்தனையோ ஆண்டுகள் ஆகிவிட்டன. அது அச்சுதராமனுக்குத் தெரியும். அகில இந்திய வானொலியில் கர்நாடக இசைப் பிரிவில் அவர் பணியாற்றத் தொடங்கியிருந்த காலம், அது. மல்லாரி ராவின் மறைவைக் கேட்டுக் கண்ணீர் வடிக்க முடிந்ததே தவிர, துக்கம் விசாரிக்கக்கூட அவரால் தஞ்சாவூருக்கு வர முடியவில்லை. இருபத்தைந்து ஆண்டுகளுக்குப் பின்னர் இப்போதுதான் அவருக்கு நேரம் கிடைத்திருக்கிறது! அதற்குக் காரணம், அவருடைய குமாரத்தி ரஞ்சனிதான். அவளுக்குத் திருமணம் நடந்தாக வேண்டும். வரன் வேட்டைக்காகத் தமிழ் நாட்டுக்கு வந்திருக்கிறார் அச்சுதராமன். டில்லியில் அவருக்குக் கிடைக்காத பையன்களா? வானொலி இசைத் துறைத் தலைவருக்கு மாப்பிள்ளையாக எந்த வாலிபனுக்குக் கசக்கும்?

அவருக்குத் டில்லி வாலிபர்களைப் பிடிக்கவில்லை. அதனால், பட்டணத்தில் டாக்டராகவோ இஞ்சினீயராகவோ இருக்கும் பையனைத் தேடிக் கொண்டிருக்கிறார். திருவையாற்றைச் சேர்ந்த ஒரு பையன், ரயில்வேயில் சிறு அதிகாரியாக இருந்தான். ஜாதகங்கள் ஒத்துப் போயின. திருவையாற்றுக்குப் போய்ப் பையனின் பெற்றோர்களைப் பார்த்துப் பேசிவிட்டுத் திரும்பியதும், தஞ்சைக் காற்று அச்சுதராமனைப் பரவசத்துக்குள்ளாக்கி விட்டது.

ஆமாம், அந்த நகரத்தின் சந்து பொந்துகளில்தான் அவருடைய இளமைப் பிராயம் கழிந்திருக்கிறது.

பெற்றோர்களை இழந்து ஆதரவின்றித் தவித்ததும் அந்த ஊரில்தான்.

நாதோபாஸகர் மல்லாரி ராவின் நட்புக் கிடைத்ததும் அங்கேதான். அவருக்குப் பணிவிடை செய்து செய்து, அவரிடம் இருந்த இசைப் புலமையின் ஒரு பகுதியைக் கைக்கொண்டதும் அங்கேதான்....

"யார், அது?"

அச்சுதராமன் சற்று அதிர்ந்தே போனார்.

"யார், அது...? மல்லாரி ராவா?.... சேச்சே...."

அச்சுதராமன் அவரைக் கடைசியாகப் பார்த்த போதே, மல்லாரி ராவ் அறுபத்தைந்து ஆண்டுகளைத் தாண்டியிருந்தார். ஆனால், இப்போது அவசரமாகக் கோயிலுக்குள் நுழைந்தவருக்கு முப்பத்தைந்து வயதிருக்கலாம். அத்துடன், அந்த மகான்தான் காலமாகி விட்டாரே?... இவர்?...

கோயிலிலிருந்து வெளியே வந்துகொண்டிருந்தார் அவர்.

"ஸார்... ஒரு நிமிஷம். மல்லாரி ராவ்... என்று பஜனைகள் செய்து கொண்டு....? அவர் குடும்பம் இங்கே?"

"நான் அவருடைய மூத்த பிள்ளை. நீங்கள்?"

"கோபாலனுடா, நீ! அவரைப் பார்க்கிறாப்பலேயே இருக்குடா! அடாடா, எப்பேர்ப்பட்ட மகான்... என்ன பக்தி! என்ன வைதீகம்!...." அச்சுதராமன் மெய்ம்மறந்து அரற்றிக் கொண்டே போனார்.

கோபால் ராவுக்குத் திகைப்பாயிருந்தது.

"நீங்கள் யாரென்று...?"

# கிருஷ்ணன் கிடைப்பானா?

## டி.எஸ்.கே

"நான் அச்சுதராமன். உன் அப்பா, 'அச்சுதன்' என்று கூப்பிடுவார். நீ சின்னக் குழந்தை. உனக்கு ஞாபகம் இருக்காது. உன் அம்மா இங்கேதானே இருக்கிறார்? வீடு எங்கே?"

"விசுவம்பர பண்டிதர் சந்தில் ஜாகை..."

"இதோ பக்கத்திலேதான்!... வீட்டுக்குப் போகலாமா?...."

கோபால்ராவ் பதில் சொல்லாமல் வீட்டை நோக்கி நடந்தான். உடன் வருகிற அச்சுதராமன் ஒரு கௌரவமான மனிதர் என்பதை அவருடைய தோரணையே தெரிவிக்கிறது. அவர் போடுகிற 'டா'வில் வாத்ஸல்யமும், 'அம்மா இருக்கிறாரா?'வில் நெருக்கமும் புலனாகின்றன. இவ்வளவு பெரிய மனிதரை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய்....

"நீ என்ன பண்ணிக் கொண்டிருக்கே?"

"நானா?... நான்... பாட்டு சொல்லிக் கொடுக்கிறேன்.... நாலைந்து டியூஷன் இருக்கு...."

"அப்படியா?... உனக்கு ஒரு தங்கை உண்டே?... பேருகூட... ராதாபாயோ, யமுனாபாயோ....?"

''பருணுதான் கல்யாணமாகித் திருச்சியில் இருக்கிறான்....''

ராஜ வீதியிலிருந்து ஒரு சந்துக்குள் நுழைந்து, நூறு அடிக்குப் பின் வலப்புறம் திரும்பி, அப்புறம் இடப்புறம் திரும்பி, மீண்டும் வலது பக்கமாய்....

''இப்படி வாருங்கள்...!''

இருட்டில் நடப்பதற்குத் தடுமாற்றமாகத் இருந்தது, அச்சுதராமையருக்கு. அவர் ஓய்வு பெறுவதற்கு இன்னும் ஓராண்டுக் காலமே இருந்தது.

கோபால்ராவ் வீட்டுக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனார்.

''அம்மா! உங்களைத் தேடிக் கொண்டு யாரோ வந்திருக்கா!'' என்று மராத்தியில் சொன்னார்.

''யாரோ இல்லே, மன்னி. அச்சுதன் வந்திருக்கேன்! ஞாபகம் வரதா? ராவுஜி பஜனைக்கு ஆர்மோனியம் வாசிப்பேனே?''

அம்மாதாட்டி அருகில் வந்து உற்றுப் பார்த்தார். ''நம்ம அச்சுதனா!....''

அச்சுதராமையர் அப்படியே அவர் பாதங்களில் விழுந்தார். ''உங்க கையாலே எத்தனை நாளைக்குச் சாப்பிட்டிருக்கேன்? உங்களோட ஆசீர்வாதம், அந்தக் கிருஷ்ணனின் அனுக்கிரஹம்... இப்போ சாப்பாட்டுக்குப் பஞ்சமில்லாமல் இருக்கேன்....''



"நீயாவது சௌக்கியமாக இருந்தால் சரிதான். உன்னோட பிறேதிதர்....."

"..... ராவுஜியையா சொல்கிறீர்கள்?... குருநாதர் என்று சொல்லுங்கோ...."

"ரெண்டும் ஒன்றுதான் அவர் பெரிய வேதாந்தியாவே இருந்துட்டுப் போயிட்டார். குழந்தைகளைப் பற்றிக் கவலைப்படவேயில்லே! கிருஷ்ணர் படத்தைத்தான் பாக்கி வச்சுட்டுப் போனுர்!....."

அச்சுதராமனுக்குத் திடீரென்று புல்லரித்தது. மனோகரமான கிருஷ்ணர் படம்!

"....படம் எங்கே இருக்கு? பார்க்கணும் போலிருக்கே!..."

தரையில் இரண்டு செங்கற்களைப் போட்டு, அதன் மேல் ஒரு பலகையை வைத்து, படத்தை வைத்திருந்தது. கோபால்ராவ் ஒரு சிம்னியை ஏற்றிக் கொண்டு வந்தார்.

தஞ்சாவூர் பாணி படம். கொழு கொழு வென்று கிருஷ்ணன். சுற்றிலும் கோபிகைகள். கண்ணனின் உதடுகளில் நிரந்தரமான புன்னகை. உடம்பு முழுதும் அணிகலன்கள்....

படத்தையே பார்த்துக் கொண்டிருந்த அச்சுதராமன் சற்றே தம்மை மறந்தார்.

அவர் செவிகளில் ஆர்மோனிய கருவியின் நாதம் இங்கிதமாய்க் கேட்டது. ஜாலராவின் ஓசை 'ஜில்'லென்று கேட்டது. மல்லாரி ராவின் அபூர்வ சாரீரம் பொருந்திய குரலும் கேட்கிறது. 'ஏஹி, தாத, போக்கும்... கோபால....' என்று, கண்ணனை உணர வருந்த அழைக்கையில், படம் உயிர்த்து எழுந்து சதங்கை ஒலிக்க, குஞ்சுப் பாதங்கள் தளர்நடை போட, மல்லாரி ராவிடம் வந்து கமலக் கர தலத்தை நீட்டுகிறது....

அச்சுதராமன் கண்ணீரைச் சுண்டிவிட்டார். "இந்த மாதிரிப் படம் யாரும் வரைகிறதே இல்லே, இப்போது..."

"யார் வாங்குகிறார்கள்?.... இந்த மாதிரிப் படங்களை வைத்திருப்பவர்கள் அவைகளை விற்றுக்கொண்டிருக்கிறார்கள்!"

"என்றாலும், இந்தப் படம் இதோ எதிரில் இருக்கிறதே? சிறப்புடையதுதான். இதன் சன்னதியில் நடந்த பஜனைகளுக்குக் கணக்கு உண்டா? சங்கீத வினிகைகளை எண்ணிச் சொல்ல முடியுமா? இந்த வேணுகான லோலன், அண்ணுவின் குரலில் நிச்சயம் மனத்தைப் பறி கொடுத்திருப்பான். வாயைத் திறக்காமல் சிரிக்கிறானே, அது அண்ணுவின் பக்தி மயக்கத்தில்தான்!" — அச்சுதராமனின் அந்தராத்மா பேசிக் கொண்டே போயிற்று.

"எங்கே தங்கியிருக்கே?" என்று கோபால் ராவின் அன்னை கேட்டதும் அவருடைய யோகம் கலைந்தது.

"ரெஸ்ட் ஹவுஸில் தங்கியிருக்கிறேன். மெயிலில் மெட்ராஸ் போகணும்...." என்றவர், கோபால்ராவைப் பார்த்து, "கோபாலா! இந்தச் சன்னதியிலே நீ பாடிக் கேட்க வேண்டும் போலிருக்கு" என்றார்.

ராவ் தம்பூராவை எடுத்துக் கொண்டு உட்கார்ந்து மீட்டத் தொடங்கினார் ராவ். என்ன தோன்றிற்றோ, 'நீங்கள் முதலில் பாடுங்களேன்' என்றார்.

அச்சுத ராமன் தலையசைத்து விட்டு, 'ப்ரணய பயோதி ஜலே...' என்று கீத கோவிந்தத்தை ஆரம்பித்தார். பாடி முடித்ததும், "அண்ணாவுக்கு இந்தக் கீர்த்தனம் ரொம்பப் பிடிக்கும்..." என்றார்.

தொடர்ந்து கோபால்ராவ், 'நிதிசால சுகமா?' பாட ஆரம்பித்தார். அச்சுதராமன் பலமாகத் தலையை ஆட்டி, 'பலே' என்று உற்சாகப்படுத்தினார்.

கடைசியில், "நன்றாகப் பாடுகிறாய்.... கிட்டத்தட்ட அண்ணுவின் சாரீரம்! கச்சேரி செய்யப்படாதோ?" என்று கேட்டார்.

"சங்கீத வித்துவானாக என்னை யாரும் மதிக்கவில்லையே!.... வெறும், பாட்டு வாத்தியார்!"

"கவலைப்படாதே. கிருஷ்ணன் கைவிட்டு விடமாட்டான்...."

"அது எப்படியோ? ஆனால், அம்மா கிருஷ்ணனைக் கைவிடத் தயாராய் இல்லை!"

அச்சுதராமன் அந்தரங்கப் பேராசையோடு இருவரையும் மாறி மாறிப் பார்த்தார்.

"பின்னே, பாருங்களேன்? இந்த அறையில் எவ்வளவு இடத்தை இந்தப் படம் அடைத்துக் கொள்கிறது? சனிக்கிழமை தவறாமல் பூச்சரம் வேறே. அப்புறம் பாயசம்!... யாராலே சமாளிக்க முடிகிறது? அம்மாவின் பிடிவாதம் மட்டும் இல்லாமல் இருந்தால், இந்தப் படம் ரூபாய் ஐந்நூறுக்கு விலை போய் இருக்கும்....."

அச்சுதராமன் உதடுகள் படபடத்தன. 'நான் கொடுக்கிறேனடா, ஆயிரம் ரூபாய். என்னிடம் கொடுத்து விடடா, படத்தை...' அவர் ஆன்மா பேசியது. மன்னியின் எதிரில் வாயைத் திறந்து சொல்ல நா எழும்பவில்லை.

பத்து நிமிடங்கள் சென்று அச்சுதராமன் விடை பெற்றுக் கொண்ட போது, "கோபாலா, கவலைப்படாதே. உனக்கு நல்ல காலம் வரும்... நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கேன், உங்க குடும்பத்துக்கு" என்று சொல்லி விட்டுப் போனார்.

இரண்டு மாதங்கள் கழித்து ரஞ்சனியின் திருமண அழைப்பிதழோடு, கோபால்ராவின் வழிச் செலவுக்குப் பணமும் அனுப்பினார் அச்சுதராமன்.

கல்யாணத்துக்கு வந்த பெரிய மனிதர்களிடமும் அதிகாரிகளிடமும் கோபால்ராவை அறிமுகப்படுத்தி, அவருடைய இசைத் திறனை வானளாவப் புகழ்ந்தார் அச்சுதராமன்.

ஒரு மாதம் சென்று, ஒலிபரப்புத் துறையிலிருந்து ஒரு கடிதம் வந்தது கோபால் ராவுக்கு. பெங்களூர் வானொலி நிலையத்தில், கர்நாடக இசைப் பிரிவில், ஒரு கலைஞராக அவர் நியமிக்கப்பட்டிருந்தார்!

"எல்லாம் அச்சுதனின் லீலை..." என்றார் கோபால் ராவ்.

தாயார் நடு நாயகமாய் விளங்கிய கிருஷ்ணர் படத்தைப் பார்த்தார்.

"நான் நின்னி அச்சுதன் பேரைச் சொல்கிறேன்....."

தாயாரின் செவிகளில் அந்தச் சொற்கள் புக முடியவில்லை.

ஆறு மாதங்களுக்குள்தான் எத்தனை மாறுதல்!

கோபால்ராவே தம்முடைய இசை ஆற்றலைக் கண்டு வியக்க வேண்டியதாயிற்று. மனத்தில் தெம்பு ஏற்பட்டதும், படித்துக் கருண

# சின்னாளபட்டி பட்டு புடவைகள்

| கோடைக்கேற்ற நூலும் பட்டும் கலந்த ரகங்கள் | | கலியாண விசேடங்களுக்கேற்ற பட்டு ரகங்கள் |
|---|---|---|
| சின்னாளபட்டி பெமினா | தங்கம் புட்டா | பட்டு மாமி |
| சின்னாளபட்டி மைபேர்லேடி | | தெய்வ மகன் |
| சின்னாளபட்டி ஆரணிசீர் | | இரு கோடுகள் |
| சின்னாளபட்டி ஆராதனா | | நம் நாடு |

6, 7, 8, 9, 10 கெஜம் புடவைகளும், 3 கெஜம் பாவாடை ரகங்களும்
மொத்தமாகவும் சில்லறையாகவும் வாங்க சிறந்த ஸ்தாபனம் - போன்:(P.P.) 76424

சின்னாளபட்டி

## K. S. M. S. மணி & பிரதர் சேல்ஸ் டிப்போ

64-D, லஸ் சர்ச் ரோடு—லஸ் கார்னர், மயிலாப்பூர், சென்னை-4

**H. O.: சின்னாளபட்டி P. O.** கிளை: தேவாங்கர் சந்திரம், மதுரை




## பிலிப்ஸ் ரேடியோக்கள்

### தவணை முறையில் கிடைக்கின்றன!

புகழ்மிக்க பிலிப்ஸின் உன்னத படைப்புகளில்
ஒன்றை தேர்ந்தெடுங்கள்

| | |
|---|---|
| பிலிப்ஸ் ரேடியோ | சோபா கம்பெட் |
| பிலிப்ஸ் டிரான்சிஸ்டர் | ஸ்டீல் அலமாரி |
| பிலிப்ஸ் மின்விளக்கு | ஸ்டீல் பர்னிச்சர் |
| எல்லாவிதமான சைக்கிள் | பிரஷர் குக்கர் |
| மின்விசிறி | ஆட்டோமேடிக் அயர்ன் |

மாதத் தவணை முறையிலும், ரொக்கத்திற்கும்
வாங்குவதற்கு சிறந்த ஸ்தாபனம்
போன்: 76424

## சாமுண்டீஸ்வரி சைக்கிள் மார்ட்

64-K, லஸ் கார்னர் – மயிலாப்பூர், சென்னை – 4

பிலிப்ஸ் மேஸ்ட்ரோ II ரேடியோ தவணை முறையில் வாங்குபவர்களுக்கு
விசேஷ சலுகை அளிக்கப்படும்



ஆச்சரியம்!

5 விநாடிகளில் ஒரு கப்
காப்பி தயாரிக்கலாம்
அதுதான் நெஸ்கஃபே.

ஒரு கப் தயார்!




தென்னிந்திய
காப்பி
விதைகளிலிருந்து
தயாரித்த முற்றிலும்
சுத்தமான
காப்பி

உணர்ச்சி ஊட்டும் நெஸ்கஃபே
உவகையளித்திடும் நெஸ்கஃபே!

நெஸ்லே
தயாரிப்பு

டிருந்த நிறைமகன் விருட்டென்று எழுந்து ஆனந்தக் களிப்புப் பாடினை. இசை பற்றிய எந்தப் புத்தகத்தைத் தொட்டாலும், முன்னரே கற்று முடித்ததாகவே தோன்றியது.

மகனின் நல்ல நிலைமையைக் கண்டு மனம் பூரித்தநிலையிலேயே கண்ணை மூடினார் அம்மை.

மேலும் சில மாதங்கள் உருண்டன.

அச்சுதராமன் அலுவல் நிமித்தமாய்ச் சென்னை வந்தார். பெங்களூரிலிருந்து கோபால்ராவை வரச் சொல்லியிருந்தார்.

''நான் சீக்கிரத்தில் ரிடையர் ஆகணும்டா, கோபாலா....''

''முன்னேயே சொல்லியிருக்கிறீர்களே ?''

''உன்னால் எனக்கு ஒரு காரியம் ஆகணும். அதனால்தான் வரவழைத்தேன்.''

''சொல்லுங்கள்... செய்யக் காத்திருக் கிறேன்.....''

அவர் தயங்கினார். அப்புறம், விஷமமாய் ஒரு சிரிப்பு.

''முதல்லே வாக்குக் கொடுத்துடாதே !... விஷயத்தைக் கேட்டால்..... மனம் துடிக்கப் போகிறதே !....''

''மாட்டேன். உங்கள் விருப்பத்தை நிறை வேற்றி வைக்க முடிந்தால், அதுவே எனக்குத் திருப்தியாக இருக்கும். எனக்குப் பேசத் தெரியவில்லை. தெரு ஓரத்தில் கிடந்த கூழாங் கல்லை எடுத்துப் பட்டை தீட்டி, கண்ணைப் பறிக்கும் வைரமாக்கியிருக்கிறீர்கள்.''

அச்சுதராமன் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''எனக்கு உங்கள் வீட்டுக் கிருஷ்ணர் படம் வேணுமே?....''

மெல்ல மெல்ல வந்த சொற்களைக் கேட்டுக் கோபால்ராவ் கண்களை விரித்தார். ஏதோ பெரியதாய்க் கேட்கப் போகிறாராக்கும் என்று எண்ணிக் கொண்டிருக்கையில்... கிருஷ்ணர் படத்தைக் கேட்கிறார் !

அம்மா இருந்த வரையில் இவர், அந்தப் படத்தைக் கேட்கத் துணியவில்லை.

அம்மா பழங்கால மனுஷி. அந்தப் படத்தை மிக உயர்வாக, மிகவும் புனிதமானதாக, ஏதோ உயிருள்ள பொருள் போலப் போற்றி வந்தாள். மகளின் கல்யாணத்தின் போது ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியின்போதுகூட, அதை விற்க அம்மா மனம் ஒப்பவில்லை.

அம்மாவின் பிடிவாதத்துக்கு ஏற்றாற் போல், யார் வந்து அந்தப் படத்தைப் பார்த்தாலும், 'இதை எனக்குக் கொடுத்து விடேன் !' என்று கேட்கத் தூண்டியது. அதன் மோகன உருவம்.

அம்மா இப்போது இல்லை. அச்சுதராமனுக்குச் செலுத்த வேண்டிய நன்றிக்கடன் மீதமாய் நிற்கிறது.

''என்ன ஸார், இப்படிக் கேட்கிறீர்கள் ? 'படத்தைக் கொடு' என்று அதிகாரம் செய்ய வேண்டியதிருக்க மெதுவாய்க் கேட்கிறீர்களே? படம், தஞ்சாவூரில்தான் இருக்கிறது. இன்று இரவே புறப்பட்டுப் போய், நாளை மறுநாள் கொண்டு வந்து சேர்த்து விடுகிறேன் ! போதுமா ?''

அச்சுதராமன் எதிர்பாராத ஆனந்தத்தால் தாக்குண்டு நிலைகுலைந்து போனார்.

''அந்தப் படத்தை வைத்து வழிபடுவதற்கு ரொம்பப் புண்ணியம் செய்திருக்கணும்



மனிதன் புலியைக் கொல்ல விரும்பினால் அதை விளையாட்டு என்கிறான். புலி மனிதனைக் கொல்ல விரும்பினால் அது கொடூரத் தன்மையாம்! - ஷா

ஸ்ரீமதி ஆர். ரங்கா

---

எனக்கு. இப்போதே அதன் எதிரில் உட்கார்ந்து பாட வேண்டும் போலிருக்கிறது ! நானும் வருகிறேன், உன்னுடன்.''

''வாருங்களேன்...''

''தஞ்சாவூரில் அந்த வீட்டில் யாரேனும் குடியிருக்கிறார்களா ?''

''நாங்களே வாடகை கொடுத்துக்கொண்டு தான் இருக்கிறோம். நீங்கள்தான் பார்த்திருக்கிறீர்களே? சின்ன இடம். ஓட்டுக் கூரை சரபோஜி காலத்துக் கட்டடம்!.... அம்மா காலமானபின் சும்மா பூட்டிவைத்து வாடகை கொடுத்துக் கொண்டிருக்கிறேன். அங்கே போய்ச் சாமான்களை அப்புறப்படுத்த நேரம் கிடைக்கவில்லை.....''

''அப்படியானால், பூஜை புனஸ்காரம் இல்லாமல் பட்டினியாய்க் கிடக்கிறார் கிருஷ்ணன் என்று சொல்லு....''

''பக்திக் கண்ணோட்டத்துடன் பார்த்தால் அப்படித்தான் சொல்ல வேண்டியிருக்கும்!''

அச்சுதராமனுக்கு என்னவோபோல் ஆகி விட்டது.

ஒரு காலத்தில் வண்ணப் பூச்சரங்களும் மாலைகளுமாய், விதம் விதமான நிவேதனங்களும் பாலும் வெண்ணெயுமாய், பஜனைப் பாடல்களைக் கேட்டுக் கேட்டுப் பூரித்திருந்த கண்ணனுக்கு... இந்த நிலை!

கொழு கொழுவென்றிருந்த நீலோத்பல சரீரம் வாடியிருக்குமோ? கன்னங்கள் ஒட்டிப் போயிருக்குமோ ? செம்பட்டு அரைஞாண் கழன்று விழுந்திருக்குமோ ? மினுமினுப்பு மங்கியிருக்குமோ ?...

மறு நாள் காலை பத்து மணிக்கு, தஞ்சாவூர் விசுவம்பர பண்டிதர் சந்திலிருந்த தம் வீட்டின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தார் கோபால்ராவ். கண்கள், கிருஷ்ணர் படம் வைத்திருந்த திசையை நோக்கின. பின்னால் நுழைந்த அச்சுதராமன் 'என் நின்னுட்டே, கோபாலா?' என்றார்.

''அங்கே பாருங்களேன்....''

படத்தில் கண்ணாடி மட்டும் சுவரில் சாத்தி வைக்கப்பட்ட நிலையில் இருந்தது ! அடிப்புறத்தில், சாண் உயரத்துக்குக் கறையான் புற்று மண்...

''.... மேலேயிருந்து மழைத் தண்ணீர் ஒழுகியிருக்கு போலிருக்கு... படம் இருந்த அடையாளம்கூடத் தெரியாமல் அரித்து விட்டிருக்கே ?....''

அச்சுதராமன் பதில் சொல்லாமல் வாசலை நோக்கி நடந்தார். 'கிருஷ்ணன் அன்னாவுக்காக வந்தான்; மன்னிக்காக இருந்தான் ; எங்களுக்காகப் போய் விட்டான்!' அவரால் மேலே நடக்க முடியவில்லை. நிலைப்படியில் அமர்ந்து குலுங்கக் குலுங்க அழுதார்.

கோயில் மண்டபத்துக்குள் வார்த்தைகளால் வருணிக்க முடியாததொரு திவ்விய மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. மலர்களோ, ஊதுபத்தியோ, அகில் மணமோ இன்னும் இப்படி எதுவாயினும் சரி, அதுவொரு தெய்வீக மணம்தான்.

முருகன் சன்னிதியில் உணர்ச்சிவயப்பட்டவர்களாக நூறு பேருக்கும் மேல் நின்று கொண்டிருந்தார்கள். கோயில் குருக்களான மகாதேவன் அன்று முருகனுக்கு மிக அழகாக அலங்காரம் செய்திருந்தார். இந்தப் புறம் தெய்வயானை நின்றிருந்தாலும், அந்தப் புறம் வள்ளியம்மையையே பார்த்தபடியான கோலம். கர்ப்பக்கிருகத்துக்குள் அழகு தெய்வீகமாகி யிருந்தது.

சுற்றியும் கேட்ட குரல்கள் சூழ்நிலையின் உணர்ச்சியை வடித்துக் காட்டியவண்ணம் இருந்தன :

'எந்த அலங்காரத்திலும் குமரன் குன்றாத அழகுடன் தெரிகிறான்...''

''மகாதேவக் குருக்களின் கைவண்ணம் அப்படி..''

''தெய்வங்களை அலங்கரிக்கும் கலையில் எப்படித்தான் இந்த மனிதருக்கு இத்துணைத் தேர்ச்சி வந்ததோ ?''

''அதுவும் அந்தத் தெய்வம் தந்துள்ள வரப்பிரசாதம்தான்.....''

நாள் முழுதும் பம்பரமாய்ச் சுழலும் மகாதேவக் குருக்களின் திறமைக்கெல்லாம் சிகரமாக அவருடைய இந்த 'மூர்த்தியை அலங்கரிக்கும் கலையை' எல்லோருமே இப்படி மிகவும் புகழ்ந்தார்கள்.

பேச்சும் குருக்கள் ஏந்தி வந்த தீபாராதனையை ஒற்றிக் கொள்வதுமாக இருந்த மனித வரிசையில் ஒருவரிடமிருந்து வந்த பேச்சு:

''அடுத்த வாரம் கோயில் காட்சிக்காக ஷூட்டிங் ஏற்பாடு செய்திருக்கிறோமல்லவா? அந்தக் காட்சியில் அம்பிகையை 'மேக்கப்' செய்ய — அப்படிச் சொல்லக் கூடாது. அலங்காரம் செய்ய – இந்த மனுஷரைத்தான் நியமிக்கப் போகிறேன்... ஐ வாண்ட் ரியலிசம் ! எனக்கு இயற்கையான அமைப்புத்தான் வேண்டும் !''

டைரக்டர் வேணுகோபால் தமது உதவியாளர் குமாரிடம் இப்படிக் கூறினார். இருப்பதை மிகைப்படுத்தியும், மிகைப்படுத்தியதை இல்லாததாகவும் காட்டும் 'மேக்கப்' கலையில்

# ஒப்பனைக்கு அப்பால்..

க. பஞ்சாபகேசன்



ஆண்டவனுக்கே இயற்கையான வேஷப் பொருத்தம் அளிப்பதாகக் கூறுவதென்றால்—

குமாருக்கு இது ஆச்சரியமாக இருந்தாலும் வேணுகோபாலின் கற்பனைகள் இப்படிச் சிகரத்தை எட்ட நினைக்கும்போதெல்லாம் புதுவிதமான 'ஐடியா'க்கள் அவருக்குத் தோன்றுவதுண்டு என்று அவருக்குத் தெரியுமாதலால் மேற்கொண்டு என்ன நடக்கப் போகிறது என்று கவனிக்கும் சுவாரசியத்தில் சும்மாயிருந்து விட்டார்.

கோயிலில் கூட்டம் குறைந்து கொண்டே வந்தது. வேணுகோபாலும் குமாரும் மகாதேவக் குருக்களுக்கு அவகாசம் கிடைக்கும் நேரம் வரை காத்திருந்தார்கள். அதுவரையும்

இருவரும் அச்சிறு ஆலயத்தைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தார்கள்.

குருக்களுக்கு அவகாசம் கிடைத்தபோது அவர் பிற்பகல் வேளைக்காக ஆலயத்தை மூடி விட்டுத் தம் இல்லத்துக்கு விரையும் நேரமாகவே இருந்தது அது.

"யாருக்காகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"உங்களுக்காகத்தான்." வேணுகோபால் சொன்னார்.



மகாதேவனின் சோபை படர்ந்த முகத்தில் ஆச்சரியம் ஒளிவிட்டது.

பெரிய கோயில் கதவுகளை மூடிப் பூட்டி விட்டு அவர் வருவதற்குள் வேணுகோபாலும் குமாரும் தங்கள் கார் அருகில் போய் நின்று கொண்டார்கள்.

"உங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும்? இப்போது உத்தரவிடுங்கள்" என்றார் மகாதேவன். பணிவும் அன்பும் பழகும் விதமும் அவர் குரலில் தொனித்தன. நாள் தோறும் 'இறைவன்' அருகே இருந்து கொண்டு பணிபுரிகிறவரல்லவா?

"இன்று முருகனுக்கு அலங்காரம்...."

"வேடன் அலங்காரம்.... இந்தக் கைகள் அதற்குப் புண்ணியம் செய்து வைத்திருக்கிறது...."

"நீங்கள் இந்த அலங்காரக் கலையில் மிகவும் தேர்ச்சி பெற்றவர் என்று கேள்விப்பட்டுத் தான் ஒரு காரியத்தை நாடி உங்களிடம் வந்திருக்கிறோம்." வேணுகோபால்தான் மகாதேவனுடன் சம்பாஷணையை நடத்திக் கொண்டிருந்தார். குமார் ஒன்றும் பேசாது கேட்டுக் கொண்டிருந்தார்.

மகாதேவன் பணிவுடன் பதில் அளித்தார்: "இறைவன் கொடுத்த கரங்கள்... 'அவனை' அலங்கரித்து நான் மகிழ்வதில் ஆச்சரியம் இல்லையே?"

அடுத்த பத்து நிமிடங்களில் அவர்களிடையில் நடைபெற்ற பேச்சு கொஞ்சம் 'லௌகீக' நிலைக்கு இறங்கி விட்டது. தமது அடுத்த படத்தில் அம்பாள் விக்கிரகத்துக்குக் கண்ணைக் கவரும் வகையில் அலங்காரம் செய்து உதவ வேண்டுமென்றும் அதற்குப் பெரிய சன்மானத் தொகை தருவதாகவும் வேணுகோபால் சற்று 'பிஸினஸ் லைக்'குடனேயே சொன்னார். தயாரிப்பாளர் சார்பில் அப்படி அவர் பேச வேண்டியதுதான் அவருடைய கடமை தான்.

"யோசித்துச் சொல்கிறேன். இரண்டு நாட்கள் அவகாசம் தாருங்கள்" என்றார் மகாதேவன். அந்தப் பதிலை அவரிடமிருந்து எதிர்பார்த்திருந்ததால் வேணுகோபால் கூறினார்:

"இன்று புதன்கிழமை. வெள்ளிக்கிழமை மாலையில் நாங்கள் மறுபடியும் வருகிறோம்.... அச்சமயம் தொகையையும் உங்களுக்கு அட்வான்ஸாகத் தந்து விடுகிறோம்; நாங்கள் புறப்படுகிறோம்."

அவ்விருவரும் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டதும், வெள்ளை 'யூனிபாரமில்' ஒளிர்ந்து கொண்டிருந்த டிரைவர் வண்டியை ஓட்ட ஆரம்பித்தான்.

மகாதேவன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தார், கண் பார்வையிலிருந்து ஒதுங்கித் தெரு ஓரத்தில் திரும்பிவிட்ட காரின் செல் கதியைப் பார்த்துக் கொண்டே.

வீட்டு வாசலில் தந்தையை எதிர்பார்த்தபடி நின்றிருந்தாள் கோமதி. மகாதேவனுடைய மகளான கோமதி இயற்கை அழகில் மின்னினாள். தாயற்ற பெண். ஆகவே, குடும்பத்தைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பும் அந்த அழகில் வைரமாக ஜொலித்தது.

இரண்டு நாட்களுக்கு முன்பு மகாதேவன் தம் பெண்ணுக்கு வாங்கிக் கொடுத்திருந்த புதுப் புடவையில் புதுப் பெண்ணாய் விளங்கிக் கொண்டிருந்தாள் கோமதி. அப்பாவுக்கு ஒரே பெருமை.

"என்னப்பா, இன்னிக்குக் கொஞ்சம் நேரம் ஆகிவிட்டாற் போலிருக்கிறதே!" என்றாள் கோமதி.

"ஆமாம், அம்மா!" என்றார் மகாதேவன் வீட்டின் உள்ளே வந்து கொண்டே.

அடுத்துக் கோமதி சாப்பாடு பரிமாறிய போதும் அப்பாவுக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்த போதும் என்றைக்குமில்லாத அதி

சமயமாய் — கலகலப்பாகப் பேசும் தன் தந்தை சற்றுக் கனமாகவே மௌனக் கோலத்தில் இருந்தது அவளுக்கு வியப்பைத் தந்தது.

மகாதேவனின் மனத்திலோ —

கோமதியின் நீண்ட கழுத்தும், அதன் அழகுக்கு அழகூட்ட ஒரு நாலைந்து பவுன் சங்கிலியையும் நல்லதொரு வரனைப் பார்த்துத் தாலிச் சரட்டையும் அணிவிக்கும் எண்ணங்கள் உலவின.

கல்யாணத்தைப் பற்றி இதற்கு முன்பு பெண்ணிடம் பேசியிருக்கும் போதெல்லாம்— 'உங்களைக் கைப் பொங்கல் செய்துகொள்ளச் செய்துவிட்டு நான் கல்யாணம் செய்துகொண்டு போய்விட வேண்டுமா அப்பா?' என்று கேட்பாள்.

''அடி அசட்டுப் பெண்ணே! தினசரி கோயிலில் இந்தக் கையால்தானே சுவாமிக்கு நைவேத்தியம் ஆக்குகிறேன்? வீட்டில் இந்த 'எட்டடிக் குச்சு வீட்டில்' இருக்கும் என் சின்ன வயிற்றுக்குப் பொங்கிக் கொள்ளவா என்னால் முடியாது?''

''முடியாது, அப்பா!''

இப்படித்தான் கோமதி தன் அப்பாவின் மேல் வைத்திருந்த அளவற்ற பாசத்தைச் 'சிணுங்கலாக' காட்டிக் கொள்வாள். ஆனால் ஏதாவது கணிசமான தொகை கிடைத்தால், தான் அதுவரை ஏதோ கொஞ்சம் சேமித்து வைத்திருப்பதையும் சேர்த்து—

''தேவி! நீதான் என் பெண்ணின் கல்யாணத்தை நடத்தி வைக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொள்வார் அவர்.

**ம**று நாள் வியாழக்கிழமை மலர்ந்துவிட்டது. கோயிலில் தமது வழக்கமான சம்பிரமங்களில் ஈடுபட்டிருந்தார் மகாதேவ குருக்கள். சாதாரண நாளானதனாலும் வழக்கமாக வருகிறவர்கள் வந்து சென்று விட்டதாலும் கோயிலில் ஒருவரைத் தவிர வேறு யாருமே இல்லை.

பிரதம மூர்த்திகளான சிவனுக்கும் அம்பிகைக்கும் அர்ச்சனைகள் புரிந்த ஒருவர் முருகனுடைய சந்நிதியிலும் கற்பூர ஆரத்தி காட்டுமாறு வேண்டவே, மகாதேவன் அவ்வாறே செய்துவிட்டு அவருக்குத் திருநீற்றுப் பிரசாதம் கொடுத்துக் கொண்டிருந்தார்.

''அழகான சின்னக் கோயில். உங்களுக்கேற்ற அமைதியான பணி. எனக்கெல்லாம் ஆகாசம் போன்ற பணிகள் உண்டு. அதனால் அமைதி இல்லை. இந்தக் கடவுளர்களின் நடுவில் ஒரு நடமாடும் தெய்வம் போலவே இருக்கிறீர்கள்'' என்றார் அவர்.

சிறிது நேரத்தில் அவரும் கோயிலை விட்டுப் போய் விட்டார். இப்போது யாருமில்லை அங்கே. அர்த்த மண்டபத்தின் நடுவே தனியே நின்றார் மகாதேவன்.

அங்கே **யாருமே** இல்லையா? அவர் மட்டும் **தனியே** நின்றாரா ?

இல்லவேயில்லை.

அதோ விநாயகப் பெருமான், நடுவில் சிவலிங்கமூர்த்தி. அடுத்து வள்ளிதெய்வயானை சமேத ஆறுமுகன்.... நேர் எதிரே சர்வலோக ரட்சகியான சாரதாம்பிகைத் **தேவி. யாருமே இல்லையா? அவர் தனியே** நின்றாரா ? விடையே கிடையாது.

கோயிலுக்கு நடுவே நின்றபடி யார் குரல் கொடுத்தாலும் எதிரொலிகள் கேட்கும். ஆனால் இப்போது யாருமே குரல் கொடுக்காத போது மகாதேவனின் மனத்தில் ஓர் எதிரொலி மட்டும் கேட்டது.

''அமைதியான பணி.... அமைதியற்ற ஆகாசமான பணிகள்....'' சற்று முன்பு வந்து போனவர் கூறிய வாசகம். இறைவனின் அசரீரியோ அது ?

அதைத் தொடர்ந்து முந்தின நாள் அதே நேரத்தில் வந்திருந்த டைரக்டர் கூறியதன் எதிரொலி :

''..... உங்களுக்கு நல்ல சன்மானம் கிடைக்க ஏற்பாடு செய்கிறேன். கணிசமான தொகையை 'அட்வான்சா'கத் தருகிறேன். நீங்கள் செய்ய வேண்டியது சினிமாவில் அம்பாள் மிகப் பிரமாதமாக ஒயிர்ச் செய்ய வேண்டியதுதான். இதற்காக நாலைந்து நாட்கள் மட்டும் உங்களுடைய நித்தியப் பணிகளை வேறு யாரிடமாவது 'டெம்பரரி'யாகத் தந்துவிட்டு நீங்கள் மட்டும் வந்தால் போதும்...''

**ம**காதேவனின் மனத்தில் என்றைக்குமே இல்லாது இப்படி இப்போது சஞ்சலம் புகுந்து கொண்டது எப்படி ?

ஆசைகள்... எதிர்பார்த்தல்கள்...ஏமாற்றங்கள் என்று வாழ்க்கையை ஆக்கிக்கொள்ள அவசியமே இல்லாமல் இறைவன் அவருக்குத் தந்திருந்த பணிக்கு நடுவே மனம் சஞ்சலம் கொள்வது ஏன்? நாலைந்து நாட்கள் அந்தக் கோயிலையும் 'கடவுளர்களையும்' விட்டுவிட்டு— நினைத்துப் பார்க்க முடியவில்லை அவரால்....

அன்று மதியச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, ''கோமதி! இன்றைக்குச் சாயந்திரம் அம்பாளுக்கு எந்த அலங்காரம் செய்யலாம், சொல்?'' என்று கேட்டார்.

''என்னப்பா இது? இன்று சாதாரண வியாழக் கிழமைதானே.... அலங்காரம் என்று......''

''இல்லே, கோமு! என் மனசும் கரங்களும்... ஆம்! இன்றைக்கு அம்பாளை மகிஷாசுரமர்த்தினியாக அலங்கரிக்....''

''அப்பா! இப்போது நவராத்திரி நாள் கூட இல்லையே....''

''இல்லே, குழந்தை! மனசில் சில தகாத எண்ணங்கள் மகிஷனைப் போல் தோன்றிவிடுகின்றன; அவற்றை அந்தத் தேவிதான்.... தேவிதான்...'' மகாதேவனால் அதற்குமேல் பேச முடியவில்லை.

**அ**ந்த வேளைக்குப் பிறகு அன்று அந்தச் 'சாதாரண' நாளைப் பெருவிழா நாளாக்கிவிட்டார் மகாதேவக் குருக்கள். அம்மன் சன்னதியில் நெரிசல் தாங்க முடியவில்லை. ஒவ்வொரு நிமிடமும் தீபாராதனை நிகழ்த்திக் கொண்டிருந்தார் மகாதேவன். அவருடைய கைவண்ணத்தில் சாரதாம்பிகை, மகிஷாசுரமர்த்தினியாக அருள்ஒளி ததும்பும் முக லாவண்யத்தில் திகழ்ந்து கொண்டிருந்தாள்.




கிண்ணம்
நிறையக்
களிப்பினையே
பருகிப்
பார்த்த
துண்டோ ?



ஃபண்டா ஆரஞ்சு
சுவை இனிதே...
பருகிடவே
எடுக்காதோ தாகம்!

ஃபண்டா, கோகா-கோலா
கம்பெனியின் தயாரிப்பு

CMCF-5-153 TAM

# இம்ப்காப்ஸ் பூரண இயந்திர சாதன வசதியோடு சுத்தமான ஆயுர்வேத, சித்த, யுனானி மருந்துகளை தயாரிக்கிறது

இந்திய மருத்துவ முறைப்படி வைத்தியம் செய்யும் மருத்துவர்கள் 1944-ம் ஆண்டிலேயே முதன்முதலாகக் கூட்டுறவுக் கொள்கையின் அடிப்படையில் ஒரு மருந்து சாலையை நிறுவினர். சுத்தமான மருந்துகளை தயாரித்து ஆயுர்வேத, சித்த, யுனானி மருத்துவ முறைக்குச் சேவை செய்வதுடன், நம் நாட்டு மருந்து மூலிகைகளை ஆராய்ந்து, புராதன மருத்துவ வல்லுநர்கள் பின்பற்றிய முறையை ஒரு நிலைப்படுத்துவதே இதன் நோக்கம். இதில் நாங்கள் நம்பிக்கையோடு முன்னேறினோம். இப்போது நவீன இயந்திர சாதன வசதிகளுடன் மருந்துகளை பக்குவமாகத் தயாரிப்பதில் பூரணத்துவம் பெற்று மக்களுக்குத் திறமையாக சேவை புரிகிறோம்.

இம்ப்காப்ஸ் தேசமக்களை ஆரோக்கியமாகவும் வலிவுள்ளவர்களாகவும் இருக்க துணை செய்கிறது.






தி இந்தியன் மெடிகல் பிரேக்டிஷனர்ஸ் கோஆப்பரேடிவ் பார்மஸி அண்ட் ஸ்டோர்ஸ் லிட்.
லாட்டிஸ் பிரிட்ஜ் ரோடு, அடையாறு, சென்னை-20

பிரபலமான கெமிஸ்டுகள் மற்றும் டிரகிஸ்டுகளிடம் கிடைக்கும்

மற்ற அலுவலகங்கள்:
4/186, மௌண்ட்ரோடு, மதராஸ்-2
போன்: 86520
48, தெற்குமாசி வீதி, மதுரை P.O.

mas/IMP/747/PI-TAM

# நோவா பிரில்லென்டைன்







சாஸ்திரிய முறைப்படி தயாரிக்கப்பட்டு 30 ஆண்டுகளாகப் பல லக்ஷக்கணக்கான மக்களால் உபயோகிக்கப்பட்டு வருகிறது. நீங்களும் வாங்கி உபயோகித்துப் பயன் பெறுங்கள்.

தயாரிப்பாளர்கள்: தி நோவா கம்பெனி ஆக்ரா ரோடு, பாண்டுப், பம்பாய் -78

LAK

''பிரமாதமான அலங்காரம்!''

''மனுஷனால் ஆகிற காரியமா இது?... நம் கோயிலுக்கென்றே இவர் அமைந்துவிட்டார்....... !''

''என்ன பக்தி இந்த மனுஷருக்கு! ஏதோ நினைத்துக் கொண்டாராம், உடனே அம்பாளுக்கு இப்படி அலங்காரம் செய்து மகிழ்கிறாரே !''

— இப்படிப் பேசியவர்கள் மகாதேவனை ஒரு பிரம்மஞானக்கி மகிழ்ந்தார்கள். இந்தப் புகழ்ச்சியில் எல்லாம் அவருடைய நெஞ்சு பதியவில்லை.

ஒவ்வொரு சமயமும் அம்பாளை நெருங்கும் போதெல்லாம், ''தேவி! என் மனங்கள் நாம் மனிதனுக்குச் சந்துரு. அவற்றை மர்த்தனம் செய்துவிடு தாயே'' என்று உருகிக் கரைந்தார் அந்த நெஞ்சுக்குள்.

அன்று அடுத்த ஊர்க் கோயிலிலிருந்து வந்த சிப்பந்திகளில் ஒருவர் மகாதேவனின் பெண்ணை மறுநாள் அந்த ஊர்ப் பையனும் தாயாரும் 'பெண் பார்க்க' வருவதாயும் ஒரு நல்ல சுபச் செய்தியைச் சொல்லிவிட்டுப் போனான். மகிஷாசுர மர்த்தினிக் கோலத்தில் ஜாஜ்வல்யித்துக் கொண்டிருந்த சாரதாம்பிகையைப் பார்த்த வண்ணம் கண்கள் பனித்துப் போனார் மகாதேவன்.

மறுநாள் வெள்ளிக்கிழமையில் 'பெண் பார்த்துவிட்டுப் போன அந்தப் பையன், உடனே தனது சம்மதத்தைத் தெரிவித்துவிட்டுப் போனதும், சீர்வரிசைகளில் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுக்க முன்வந்த சேர்த்தி முதலியவும் ஒருபுறமிருக்க—

அன்று மாலை அம்பிகை அமைதியான திவ்விய வடிவில் சாரதாம்பிகையாகவே திகழ்ந்து கொண்டிருந்தபோது, சன்னதியில் டைரக்டர் வேணுகோபாலுக்கும் அவர் உதவியாளர் குமாருக்கும் பிரசாதம் வழங்கிக் கொண்டே மகாதேவன் கூறினார்:

''மன்னிக்க வேண்டும். என் அலுவல்களிலிருந்து என்னைப் பறித்துக் கொண்டு ஓரிரு நாட்களுக்குக்கூட நான் வருவதற்கில்லை. அதற்குள்ள அனுமதி என் மனசிலிருந்து எனக்குக் கிடைக்கவில்லை.''

டைரக்டர் வெறும் படத்தை மட்டுமின்றி, அதன் அடிப்படையில் கொஞ்சம் உலகத்தையும் கூடத் தமது இயக்கும் தொழிலில் நன்கு கவனிப்பவராதலால் டைரக்டர் வேணுகோபால் இதை மகாதேவனிடம் எதிர்பார்த்தே வந்தார். தமது உதவியாளரான குமாரைப் பார்த்துப் புன்னகை செய்துவிட்டு, மகாதேவனைப் பார்த்து, ''முருகனுக்கும் ஒரு தீபாராதனை காட்டி விடுங்களேன்'' என்றார்.

கற்பூரம் ஒளிவிட்ட தட்டத்தை அவர்களிடம் ஏந்திக் கொண்டே ''நாளைக்குக் கிருத்திகை. முருகப் பெருமானுக்குத் திவ்விய அலங்காரமாக.......'' என்று சொல்லிக் கொண்டே வந்தவருக்கு நாத் தழுதழுத்தது: கற்பூர தீப ஒளியில் கண்ணீர் மின்னியது.

குருக்களின் கைவண்ணமாம் ஒப்பனைக்குள் அடங்கிய இறைவன், அவர் மனத்துள் அந்த ஒப்பனைக்கும் அப்பாற்பட்ட பேருணர்வாக அல்லவா இருந்தான்?




## ஸ்ரீமத் பாகவதம்

ஸ்ரீமத் பாகவதத்தை எளிய தமிழில் அளித்திருக்கிறார் அ.லெ. நடராஜன். மகாவிஷ்ணுவின் அவதார மகிமைகளைப் பெற்றோர்கள் மனத்தில் வாங்கிக் கொண்டு குழந்தைகளுக்குக் கதை சொல்ல உதவும் நல்ல நூல். பக்கத்துக்குப் பக்கம் அச்சுப் பிழைகள் மலிந்திருக்கின்றன. கொட்டை எழுத்துக்களில் அச்சாகியும் இந்தப் பிழைகள் வந்தது ஆச்சரியமே. ஓவியர் எஸ். ராஜம் தமக்கே உரிய தனிப் பாணியில் பல அவதாரங்களையும் கிருஷ்ண பகவானின் லீலைகளையும் சித்திரித்திருக்கிறார்.

பிரசுரம்: புக்ஸ் இந்தியா பிரைவேட் லிமிடெட் 135, பவழக்காரத்தெரு, சென்னை-1; இரண்டு பாகங்கள் ஒவ்வொன்றும் விலை: ரூ. 3 00.

## ஒருமைப்பாடு வீடு

ஒருமைப்பாடு வீட்டில் நான்கு குடித்தனங்கள் ரயில் சிநேகம் போல ஒன்று சேருகின்றன. ராஜஸ்தான கன்யாலால், வங்காளி சாட்டர்ஜி, பஞ்சாபி பலதேவ் சிங் முதலியவர்களுடன் தமிழ் நாட்டு நீலகண்டன் குடும்பத்தோடு இணைந்து உறவாடி, மாமியார் வருகை, வேலைக்காரிகள் ஸ்டிரைக் போன்ற பொதுப் பிரச்னைகளைச் சமாளிக்கும் கட்டங்களை இந்த நாடகம் நகைச்சுவை ததும்பச் சித்திரிக்கிறது. ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் போல இந்த நகைச்சுவை நாடகத்தில் ஒரு நகைச் சுவையை அள்ளி வீசினால் போதுமல்லவா?

சாட்டர்ஜி: ஜட்கா வண்டிக் குதிரை என்றும் அதன் கடமை ஜட்கா வண்டி இழுப்பதுதான்! ஜாக்பாட் குதிரை என்று நினைத்துக்கொண்டு ரேஸில் ஓட முடியுமா? குடும்பஸ்தன் என்றால் குடும்பத்தைக் கட்டி இழுப்பவன். குடும்பத்தோடு குதித்து போடுபவன் இல்லை!

ஒருமைப்பாடு வீடு நாடகம் 'கல்கி'யில் தொடராக வந்து இப்பொழுது புத்தக உருவில் உருவம் பெற்றுள்ளது. கோமதி சுவாமிநாதன் அவர்கள் எழுதியுள்ள இந் நாடகம் படிக்கவும், ஏன், நடிக்கவுமே ஏற்ற நாடகம்.

பிரசுரம்: மல்லிகைப் பதிப்பகம், சென்னை 17. விலை ரூ. 2




**நா**ன் சில வாரங்களுக்குமுன், மதுரையில் உள்ள அரசாங்க பஸ் போக்குவரத்து நிலையத்தில் தூத்துக்குடிக்கு டிக்கெட் வாங்க நின்றேன். ஆனால் கிடைக்கவில்லை. இருந்தும், நான் குறிப்பிட்ட பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன். பஸ் புறப்பட ஒருசில நிமிடங்களே இருந்தன. அந்தப் பஸ்ஸில் சென்று கொண்டிருந்த ஒருவர் வர நேரமாகிவிட்டதால் நான் அந்த இடத்தைப் பெற முயற்சி செய்தேன். நான்கு ஐந்து பேர்கள் வெளியே நின்று கொண்டிருந்தனர். அவர்களும் அவ்வாறே செய்ய முற்பட்டனர். மேற்குறிப்பிட்ட பஸ்ஸின் கண்டக்டர் எவ்வித பயமோ, அல்லது தயக்கமோ இல்லாமல், சில ரூபாய்களை அதிகப்படியாகக் கொடுத்தவரை பஸ்ஸில் ஏற அனுமதித்தார்.

திருச்செந்தூர்
18-5-70 — சி. குமாரவேல் கார்த்தி

**மே**ட்டூர் செல்ல நேரும்போது அணையை அடுத்துள்ள பெரிய பூங்காவைப் பார்க்க விரும்புவது இயல்பே.

நான் என் குடும்பத்தாருடன் 17-5-70ல் நுழைவுக் கட்டணம் செலுத்தியபின் பூங்காவைப் பார்க்க அனுமதிக்கப்பட்டோம்.

அங்கு எங்களில் சிலர் மலஜலம் கழிக்க விரும்பிய போது அந்த அறைகள் மிக அசுத்தமாக இருக்கக் கண்டேன். பல நாட்களாகச் சுத்தம் செய்யப்படாத நிலையில் இருந்தது. தண்ணீர் வசதியோ அருகில் எங்கும் செய்யப்படவில்லை.

இது போன்ற பெரிய பூங்காக்களில் மக்கள் சில மணி நேரம் தங்க வேண்டியிருப்பதால் சுகாதார வசதிகள் நன்கு கவனிக்கப்பட வேண்டும். பூங்கா சுத்தமாக இருக்க இது அவசியம்.

காவேரிபட்டினம்
18-5-70 — கே. வி. பழநிஸ்வாமி

**ஆ**ந்திரப் பிரதேசத்தில் உள்ள கபிலேக வாடபுரி பஞ்சாயத்துச் சமிதிக்கு நடக்கப் போகும் தேர்தலை முன்னிட்டுச் சுமார் 400 வோட்டுக்கள் மொத்தம் 50,000-ரூபாய்க்கு ஏலத்தில் விற்கப்பட்டன என்ற தகவலை ஆந்திர [illegible] மந்திரி திரு ஆர். ராமலிங்கராஜு ஒரு பொதுக்கூட்டத்தில் பேசுகையில் தெரிவித்தார் என்ற செய்தியை மே 17 தினமணியில் படித்தேன்.

திரு காமராஜ் கோனாச்சல் உடதேர்தலை ஒட்டி ஒரு கிராமத்தில் சுற்றுப் பிரயாணம் செய்கையில் ஒரு பெண் வாக்காளர் தனது வோட்டுக்கு ஒரு ரூபாய் தருமாறு அவரிடம் கேட்டதாக மற்றொரு செய்தி மே 19ந் தேதி இந்தியன்எக்ஸ்பிரஸில்வெளியாகியிருக்கிறது.

இந்த இரண்டு செய்திகளையும் படித்த போது நமது (பாமர) மக்கள் எப்படி அரசியல் வாதிகளின் பணத்துக்கு அடிமைப்படுகிறார்கள் என்பதை அறிந்து வேதனைப்பட்டேன். வேறு என்ன செய்ய முடியும்?

உதகமண்டலம்
20-5-70 — வி.வி. சங்கரன்

## பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

**எ**ன்னுடைய விதவைச் சகோதரி இங்குள்ள ஓர் ஆரம்பப் பாடசாலையின் தலைமை ஆசிரியையாகப் பணியாற்றி வந்தார். எதிர்பாராமல் நடந்த ஒரு விபத்தில் இடுப்பு எலும்பில் முறிவு ஏற்படவே, குறித்த காலத்துக்கு முன்பே தலைமை ஆசிரியைப் பதவியிலிருந்து ஓய்வு பெற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அப்பதவியிலிருந்து 5-1-68ல் ஓய்வு பெற்றார். கடந்த இரண்டு வருடங்களாகப் பிறருடைய உதவியின்றி என் சகோதரி நடமாட முடியாத நிலையில் இருக்கிறாள்.

என் சகோதரியின் ஓய்வுகாலப் பென்ஷன், பிராவிடண்ட் பண்ட் இது சம்பந்தமான காகிதங்கள் (5-1-68ல் அவர் ஓய்வு பெற்றும்) இது நாள் வரை தஞ்சை எல்லையைத் தாண்டவில்லை. ஏதேதோ காரணங்கள் கூறித் தஞ்சையில் உள்ள துணைக் கல்வி அதிகாரி (ஆய்வாளர்) அலுவலகத்திலிருந்து பள்ளி மானேஜ்மெண்டுக்குத் திருப்பி அனுப்பப்பட்டுள்ளது என்றும், மானேஜ்மெண்டார் மீண்டும் 25-1-70 அன்று எல்லாம் சரியாகச் சமர்ப்பித்துள்ளதாகவும் அப்பள்ளியில் பணிபுரியும் ஓர் ஆசிரியை வாயிலாக அறிந்தேன். இனி இக்காகிதங்கள் மேற்கொண்டு தஞ்சை மாவட்ட கல்வி அதிகாரி அலுவலகம் சென்று பிறகு பென்ஷன் சம்பந்தமாக உத்தரவுகள் பிறப்பிக்க வேண்டும். இதற்கு இன்னும் எத்தனை மாதங்கள், வருடங்கள் பிடிக்கும் என்பதை யாரும் அறியார். என் சகோதரியின் சொந்தச் சேமிப்பில் இருந்த பணமும் கொஞ்சம் கொஞ்சமாகச் செலவழிக்கப்பட்டு விட்டது. கண்ணை மூடுவதற்குள் ஒரு தடவையாவது இப்பென்ஷனைக் கையெழுத்திட்டு வாங்குவேனோ என்றே கூறிவருகிறார். பென்ஷன், பிராவிடண்ட் பண்ட் ஆகியவற்றைத் துரிதமாகப் பெற முடியாமல் இது போன்று இன்னும் எத்தனை பேர் அவதிப்படுகிறார்களோ! சம்பந்தப்பட்ட அதிகாரிகள் பொறுப்புணர்ச்சியுடன் தாமதம் ஏதும் செய்யாமல் செயலாற்ற வேண்டும்.

தஞ்சாவூர்
16-5-70 — எம். ராஜகோபாலன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathar Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam



Blue Seal
TALC
வியர்வை
நாற்றத்திலிருந்து
பூரண பாதுகாப்பு
ப்ளூ ஸீல் டியோடெராண்ட் டால்க்
ஹெக்ஸக்ளோரோபீன் கலந்தது
வலிமை மிக்க ஹெக்ஸக்ளோரோபீன் பாக்டீரியாக்களின் அழிவைத் தடுக்க, வியர்வையின் நாற்றம் நீங்கி புத்துணர்ச்சி பெறுவீர். உடலை நறுமணத்துடன் கமழச்செய்யும் அதன் சுகந்தம்.
நினைவிருக்கட்டும்! பாதுகாப்புக்கும் புத்துணர்ச்சிக்கும் உங்களுக்கு உறுதி யளிப்பதற்கு பட்டுமென்மை ப்ளூ ஸீல் டியோடெராண்ட் டால்கைத் தவிர வேறெதுவுமில்லை.
ப்ளூ ஸீல்
டியோடெராண்ட
டால்க்
ஹெக்ஸக்ளோரோபீன்
கலந்தது.
சீஸ்ப்ரோ பாண்ட்ஸின்
இன்னொரு தரமான தயாரிப்பு.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# முதன்மையில் நிலைப்பீர் மாஸி-பர்கூஸனுடன்









இந்தியாவிலுள்ள பெரும்பாலான விவசாயிகள் மற்றெந்த டிராக்டரைக் காட்டிலும் மாஸி-பர்கூஸன் 1035 டிராக்டரைப் பெரிதும் விரும்புகிறார்கள். ஏனெனில் இது மிகுந்த சக்தி கொண்டது. சிக்கனம் வாய்ந்தது. பல வகையில் பயன் அளிப்பது. உலகப் புகழ் பெற்ற பர்கூஸன் முறையைக் கொண்ட டிராக்டர் இது ஒன்றே.

மாஸி-பர்கூஸன் 1035 டிராக்டரும், கருவிகளும், விற்பனைக்குப் பின் விரிவான சேவை அளிக்கும் சீரிய ஏற்பாடுகள் கொண்ட, நாடு முழுதும் பரவியுள்ள விற்பனையாளர் அமைப்பின் ஆதரவைக் கொண்டுள்ளன.

**TAFE**

டிராக்டர்ஸ் அண்டு பார்ம் எக்விப்மெண்ட் லிமிட்டெட், மதறாஸ்





